உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௪.] ஈசுவர௵ புரட்டாசிமீ [பகுதி-௧௧.

Vol. 34. September—October 1937. No. 11.

## கம்பராமாயண சாரம்.

[௨௮௨-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### இரணியன்வதைப்படலம்

திருமால் நரசிங்கமாகி இரணியனைக் கொன்றதைக் கூறுவது.

இரணியன் மும்மூர்த்திகளுக்கும் மேலாதல்

['இரணியன் வேதப்பொருள்களெல்லாவற்றையும் பிரமதேவனே கற்பிக்கப்பெற்றான்; (விளக்கிற் பொருத்திய தீவட்டிபோலக் கற்பித்த பிரமனினும் மிக்க அறிவினனாய்ப்) பெருந்தவம்புரிந்து, அவன்காலத்திருந்த திரிமூர்த்திகளுள்பட்ட எல்லாரினும் உயர்வுடையோனாகி, ஆக்குதல் காக்குதல் நீக்குதலாகிய அந்த மும்மூர்த்திகளின் முத்தொழில்களையும் தானொருவனே புரிபவனாகித் தனக்கு வேதப்பொருளுணர்த்திய பிரமன்முதலோர் யாவரும் தன்னைத் தியானித்துத் தன் பாதங்களை வணங்கித் தன் நாமத்தையே மூலமந்திரமாகச் செபிக்கச்செய்தான்.

குரு ' "இரணியாயநம" என்று சொல்' என,
இரணியன்பிள்ளை பிரகலாதன் 'நாராயணாயநம' எனல்.

அவன், பிறக்கும்போதே ஞானவானாகப் பிறந்த பிரகலாதனென்னும் தன் பிள்ளைக்கு வேதமோதுவிக்கும்படி ஒரு வேதியனை நியமித்தான். குரு, ' "இரணியாயநம" என்று சொல்' எனச் சீடன் 'ஓம் நமோ நாராயணாய' என்று ஓதித் தலைமேற் கைகூப்பித்

*

திருமாலைத் தியானித்துக்கண்ணீர்வார மெய்ம்மயிர்சிலிர்ப்பப் பத்தி பரவசனுயிருந்தான். அதுகண்ட ஆசாரியன் ஐயோ! அனர்த்தம் விளைந்ததே! என்று அஞ்சிக் கூறுகின்றான்:]

குரு பிரகலாதனை வெறுத்துக்கூறல்.

8 கெடுத்தொ ழிந்தனை யென்னையு முன்னையுங் கெடுவாய்
படுத்தொ ழிந்தனை பாவிஎத் தேவரும்[1] பகர்தற்
கடுத்த தன்றியே யயலொன்று பகரநின் னறிவில்
எடுத்த தென்னிது வென்செய்த வண்ணம்நீ[2] யென்றான்.[3]

கொண்டுகூட்டு: 'கெடுவாய்! பாவி! என்னையும் உன்னையும் கெடுத்தொழிந்தனை! படுத்தொழிந்தனை! எத்தேவரும் பகர்தற்கு அடுத்ததன்றியே அயல் ஒன்று பகர நின் அறிவில் எடுத்தது இது என்! நீ செய்தவண்ணம் என்!' என்றான்.

பொருள்: 'பாவீ! என்னையும் உன்னையும் ஒருசேரக் கெடுத்துவிட்டாய்! எந்தத் தேவரும் சொல்லுதற்கடாததும் (அவர்களெல்லாரும் ஓதும் "இரணியாயநம" என்ற மந்திரத்திற்கு) வேருயதுமானதொன்றைச் சொல்லும்படி உன் புத்தியிற்பட்டது ஆச்சரியம்! நீ செய்தவாறு என் என்பேன்!' என்று சொன்னான் (குரு).

கெடுவாய், ஓர் இகழ்ச்சிமொழி (தமிழகராதி). 'கெடுவா'யென்பது உலகவழக்கில் 'நீ நாசமாகப் போக' என்று கூறுவதன்பொருளுடையதாகவும் கொள்ளலாம். படுத்தல் - அழித்தல். 'கெடுத்தொழிந்தனை' என்றதையே மனவருத்தம் வளர்ந்ததனால் திரும்பக்கூறுவானாய் அப்பொருள்படப் 'படுத்தொழிந்தனை' யென்றான்.

பாடபேதம்: [1] அத்தேவரும், அத்தேவரை, அத்தேவனை. [2] என் செயவெண்ணினை. [3] ஈதென்றான்.

பிரகலாதன் வேதம் ஓதவேண்டியதில்லை யெனல்.

[இவ்வாறு கூறிய குருமொழிக்கு மறுமொழியாகச் சீடன், '"நாராயணாய நம" என்றதனால், என் தந்தையை யீடேற்றினேன்: உன்னை ஈடேற்றினேன்: உலகமெல்லாம் ஈடேறச்செய்யும் மூலமந்திரத்தை மொழிந்தேன். இது எவ்வாறு குற்றமாம்' என்றான். குரு, இதை நான்தான் சொல்லிக்கொடுத்தேனென்று இரணியன்

கோபிப்பானேயென்று மனத்துள் எண்ணி, வாய்விட்டு 'என் அப்பனே! இந்தப்பெயரைக் கூறி என்னைக் கெடுத்துவிடாதே'* என்று கெஞ்சிக் கூறினன்.

பிரகலாதன், 'வேதநாயகன்பேரைவிடுத்து வேறுபேர் கூறுவேனல்லேன். அவன்பேரினும் சிறந்தபேர் வேறில்லை. அவன் என் அகம்புகுந்திருத்தலால், வேதப்பொருளையெல்லாம் தெளிவாகத் தெரிந்தவனானேன். யான் வேதமோதவேண்டியதில்லை' என்றான்.

பிரகலாதன் சொல்லத்தகாததைச் சொன்னானெனக்,
குரு இரணியனிடம் கூறல்.

எனவே, குரு, தனக்கு மரணகாலம்வந்துவிட்டதென்று மனம் மறுகி இரணியனை அடைந்து, 'இறைவனே! யான் சொன்னால் என்னை இம்மைமறுமைப்பயன்களிரண்டையும் இழக்கச் செய்வதும் நெஞ்சால் நினைக்கவே அடாததுமான வார்த்தைகளை உன்பிள்ளை உரைத்து, "என்தந்தையைநினைதலால் என்ன பயன்?" என்று கூறி, "யான் வேதம் ஓதவேண்டியதில்லை" என்று சொன்னான்' என்றான். இரணியன் 'நமக்கு அடாததும் புதியதுமாக அவன் சொன்ன சொற்களைச் சொல்' என, வேதியன் விளம்புகின்றான்:]

இரணியன் 'அதைச் சொல்' எனக்
குரு 'சொன்னால் நரகம் வந்திடும், நாவு வெந்திடும்' எனல்.

9 அரச னஃதுரை செய்தலு[1] மந்தண[2] னஞ்சிச்
சிரத லங்கரஞ் சேர்ந்திடச்[3] செவித்தொளை சேர்ந்த
உரக மன்னசொல் யானுனக்[4] குரைசெயி னுரவோய்
நரக மெய்துவ[5] னாவும்வெந் துகு[6]மென நவின்றான்.

கொண்டுகூட்டு: அரசன் அஃது உரைசெய்தலும் அந்தணன் அஞ்சிச் சிரதலம் கரம் சேர்ந்திட 'உரவோய்! செவித்தொளை சேர்ந்த உரகம் அன்ன சொல்லை யான் உனக்கு உரைசெயின், நரகம் எய்துவன்: நாவு வெந்து உகும்' என நவின்றான்.

பொருள்: இரணியன் 'அச்சொல்லைச்சொல்'லென்றவுடனே, வேதியன் பயந்து தலைமீது கைகள் பொருந்த(க் குவித்துக்

* 'எந்தை! இப்பெயர் உரைத்தெனைக் கெடுத்திடல்!'

கும்பிட்டு)க் 'காதுக்குள் நுழைந்த பாம்புபோன்ற அந்தச் சொல்லை நான் சொல்வேனானால், நரகத்தை அடைவேன். (பின்பு நரகமடைவது கிடக்க, இப்போதே) நாக்கு வெந்தொழிந்துவிடும்' என்று கூறினான்.

'அஃது', பிரகலாதன் சொன்ன 'ஓம் நமோ நாராயணாய' வென்பது. உரகம் - பாம்பு. உரவோய் - வலிமையுடையோனே. நாவும் என்பதில் உம்மை இசைநிறை. உகுதல் - கெடுதல்.

பாடபேதம்: [1] அன்னவை யுரைசெய. [2] மறையவன். [3] சேர்த்திரு. [4] உனக்குநான். [5] எய்துமென். [6] வெந்திடும்.

'நீ சொல்லிக்கொடுத்தபடியே சொல்'லென்று
இரணியன் பிரகலாதனுக்குப் புத்திகூறல்.

[இரணியன் பிரகலாதனை இட்டுவரக் கட்டளையிட, அவன் வந்து வணங்க, அவனை வாரியெடுத்து, மார்போடணைத்து, இறுகத் தழுவிப் பக்கத்தில் இருத்தி, 'உன்குரு வெறுக்கும்படி நீ சொன்னதைச் சொல்லு' என, 'வேண்டியவைகளை வேண்டியவண்ணம் உதவுவதும் சுவர்க்கபோகங்களை அடையச்செய்து முடிவில் முத்தி பெறச்செய்வதுமான "ஓம் நமோ நாராயணாய" வென்னும் மூலமந்திர' மென்றான். எனவே, இரணியன், கோபமூண்டு, 'யான் தோன்றியகாலந்தொட்டு இந்தப்பெயரைச் சொன்னவர்கள் நாக்கையும் சொல்லக்கருதிய மனத்தையும் என் ஆக்கினை சுட்டுவிடும். இதை உனக்குச் சொல்லியது யார்? சொல். திரிமூர்த்திகளும் தியானித்துச் சேவிப்பது என் பாதங்களையே; செபிப்பது என் நாமத்தையே. அவர்கள் நீ கூறிய பேரைச் சொல்ல அஞ்சுவார்கள். வேறு யார் அதை உனக்குத் தெரிவித்தார்கள்! நீ உரைத்த பெயரையுடையவன் என்னை எதிர்த்துத் தோற்றுத் தான் ஏறிவந்த கருடனது கடுவேகத்தால் தப்பியோடிக் கடலுக்குள் ஒளித்து உறங்கிக்கிடக்கின்றான். அவன், முந்திய தலைமுறைகளில் நம் முன்னோர்பலரைக் கொன்றவன். இந்தத்தலைமுறையில் என் தம்பி இரணியாக்கனைப் பன்றியுருக்கொண்டு கொன்ற படுபாவி. அந்தப் பாதகன்பேரைக் கூறவோ, நான் உன்னைப் பெற்றேன். என்தபோபலத்தால் எனக்குமுன் தலைமைதாங்கியிருந்த மும்மூர்த்திகளையும்

அவர்கள் பதங்களை யிழக்கச்செய்துவிட்டேன். இனி, அவர்களும் பிறரெவரும் வேள்விமுதலியவைசெய்து தலையெடாத படி எல்லாரையும் அடக்கி ஆண்டுவருகின்றேன். இப்போது யாரும் என்னாலன்றி எப்பயனும் எய்தாதநிலையிலிருக்கின்றேன். நீ அறி யாத சிறுபிள்ளையாதலால் உன்பிழையைப் பொறுத்தேன். இனி இந்தப்பேரைச் சொல்லாதே. உன் குரு சொல்லிக்கொடுப் பதைச் சொல்லு. வேதம் ஓது போ' என்றான்.

இரணியன்கூறியதை மறுத்துப் பிரகலாதன்
'உன் நன்மைக்குநீ ''ஓம் நமோ நாராயணாய'' என்றே'னெனல்.

பிரகலாதன், '(சிலந்தி தன்னுள்ளேயுள்ள சத்தினால் வலை செய்தல்போல, அதாவது தானே வலையாதல்போலப்) பரம் பொருள் தானே அண்டகோடிகளடங்கிய பிரபஞ்சமாகியுள்ளது. வேர் தூர் பணை கிளை கொம்பு வளார் தளிர் இலை அரும்பு பூ பிஞ்சு காய் கனி பலவானாலும், மரம் ஒன்றாதல்போலத் தான் பல வகைப்பட்ட சராசரமானாலும் அப் பரம்பொருள் ஒன்றேயாக விருக்கின்றது. ('முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளே - பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியனே' என்றவாறு) அது, தனக்கு யாதும் முன்னதில்லாதது; பின்னது மில்லாதது: தோற்றநிலையில் மாறுபடலன்றி உண்மைநிலையில் மாறுபடாதது. சாங்கியம் யோகமென்ற இரண்டுந் தெரிந்தவரும் உபநிடதங்களையறிந்தோரும் உணர்வது: தம்மைத் தாம் அறிந் தோர் அறிவது: வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதது: கருமமும் கருமபலனும் கருமபலனளிக்கும் கர்த்தாவுமாகவுள்ளது: அறிவா னும் அறிவும் அறிபொருளுமாக இருப்பது: உயிர்கள்செய்யும் வினைகளின்பயன்களை அதற்குரிய காலத்தில் அடையச்செய்வது. கண்ணுள்ளே மறைந்துநின்று காட்சிக்குரியபொருள்களைத் தான் கண்டு உயிர்களைக் காணச்செய்வது: உள்ளத்துள்ளே ஒளித்து நின்று உண்மைகளைத் தான் உணர்ந்து உயிர்களை உணரச் செய்வது: உடலுக்குடலாய் உயிருக்குயிராய் உணர்வுக் குணர்வா யுள்ளது: அலைகள் பலவாய்க் கடல் ஒன்றாயிருத்தல்போலச் சமய வாதிகளின் கடவுளர் பலராய்த் தான் ஒன்றாயிருப்பது: இப்படிப் பட்ட பரம்பொருளாகிய நாராயணனை இகழ்ந்து, அளவற்ற

ஐசுவரியத்தையும் ஆயுளையும் இழக்கின்றாயே யென்றிரங்கி, நீ அவைகளை இழந்துவிடாதிருக்கும்படி கருதி, "ஓம் நமோ நாராயணாய" என்று ஓதினேன்' என்றான்.

இரணியன் சொற்படி கொலைஞர் பலவகையாகக்கொல்லமுயன்றும் பிரகலாதன் தீங்கு உறாமை.

உடனே, இரணியன் கொடுங்கோபங்கொண்டு, 'வேறே எனக்குப் பகை வேண்டுமோ, எனக்குப் பகை என் உடம்புக்குள்ளேயே உண்டாகிப் பிள்ளையாகப் பிறந்திருக்கிறது. இவன் என் பகைவனுக்கு அன்புடையவ னென்கின்றான். இவனைக் கொல்லுங்கள்' எனக் கொலைஞர்கள் கொல்லப்புகுந்தார்கள். ஒரு யானைக்கன்றைப் பல சிங்கங்கள் வளைந்தாற்போல, அந்தக் கொலையாளிகள் பிரகலாதனைச் சூழ்ந்து அவனைக் கொல்லப் பல ஆயுதங்களைப் பிரயோகித்தனர். அவையெல்லாம், 'தூயவன்றனைத் துணையெனவுடையவவ் வொருவனைத் துன்னுதார் வாயினால் வைத வசவுகள்' போல, யாதோர் ஊறும் செய்யாதொழிந்தன. எறிவனவும் எய்வனவும் வெட்டுவனவும் குத்துவனவுமான ஆயுதங்களனைத்தும் அவன் மேனிமீது தாக்கின அளவிலே தவிடுபொடியாயின: அவை, தாம் தகர்ந்தனவேயன்றி, அவன் தோள்மேற் சொறிந்தாலுண்டாம் அடையாளமும் தோன்றச்செய்யவல்லன அல்லனவாய்த் தொலைந்தன. தன் குழந்தைக்கு அன்புசெய்யுந் தாயேபோல எல்லா உயிர்களுக்கும் அன்புசெய்யும் அவன், திருமால் திருவடிகளைத் தியானித்தலும் அவ் இறைவன் திருநாமத்தைத் செபித்தலுமே எல்லா ஆயுதங்களுக்கும் எதிராயுதங்களாகக் கொண்டிருந்தான்.

கொலைகாரர் இரணியனிடம்போய் 'உன் பிள்ளையை ஆயுதங்களனைத்தும் ஒரு சிறிதும் ஊறுசெய்தில' என்றார்கள். அப்போது அவன் கட்டளையிட்டபடி, அவர்கள் பிரகலாதனை அனலை வளர்த்து அதிலே தள்ளியும், அட்டமாநாகங்களைக்கொண்டு கடிக்கச்செய்தும், எட்டுத்திசையானைகள் முட்டவிட்டும், மிக உயர்ந்த மேன்மாடத்திலேற்றிக் கீழேதள்ளியும், மலையோடுசேர்த்துக்கட்டிக் கடல்நடுவே யெறிந்தும், நஞ்சூட்டியும் அவனை அணுவளவு தீங்கும் அணுகவில்லை.

இரணிய பிரகலாத சம்வாதம்.

இந்த விவரம் தெரிந்த இரணியன், கோபாக்கிராந்தனாய், 'யானே கொல்வேன்' என்று எழுந்து பிரகலாதனைக் கொல்ல வந்தான். இவன் 'என் ஐயனே! என் உயிர், எல்லாவுலகங்களையும் தந்த இறைவன் தந்தது; அவன் உடைமை; உன்னாற் கொள்ள வொண்ணாதது' என்றான். அவன் 'திரிமூர்த்திகளுமே என்னைச் சேவிக்கின்றார்களே. வேறு யார் உலகந்தந்தவர்? விளங்கச்சொல்' என, இவன் 'எல்லா உலகங்களையும் உயிர்களையும் தந்து அவைகளின் உள்ளும் புறம்பும் உள்ளவன் திருமாலே. தெரிவாயாக; அப்பெருமான் "என்கண்ணால் நோக்கிக் காணாற் கெங்கணும் உளன்காண்" ' என, அவன் சிரித்து 'அவன் எங்கும் இருக்கின்றானென்றால், இந்தத் தூணில் இருக்கவேண்டுமே, அதைத் திருட்டாந்தப்படுத்திக் காட்டு' என, இவன் 'எம்பெருமான் பென்னம்பெரிய மேருவினும் சின்னஞ்சிறிய அணுவினும் இருக்கின்றான். அந்த அணுவை ஆயிரங்கூறுகளாக்கினாலும் அந்தக் கூறுகளொவ்வொன்றினும் இருப்பன். அம்மட்டோ, "அவனைக்காட்டு" என்ற உன் சொல்லினும் உள்ளவன். ஆதலால் இந்தத் தூணிலும் இருக்கின்றான். நீ சீக்கிரம் தெரிவாய்' என, அவன் 'நீ எங்கும் இருக்கின்றானென்பவனை இந்தத் தூணிலே தோன்றச்செய்யாயெனில், யான் உன்னைக்கொன்று உன் இரத்தத்தைக் குடித்து உன் உடலை உண்பேன்' என, இவன் 'என் உயிர் நீ கொல்ல எளியதன்று. நான் சொன்னவன் நீ தொட்ட தொட்ட இடந்தோறும் தோன்றானாயின், என்னுயிரை யானே மாய்ப்பேன். அன்றேல் அவனுக்கு அடியனல்லேனாவேன்' என்றான்.]

இரணியன் தூணில் அறைய, உள்ளிருந்து நரசிங்கம் சிரித்தல்.

10 நசைதிறந் திலங்க[1]ப் பொங்கி நன்றுநன் றென்ன நக்கு[2]
விசைதிறந்[3] துருமு வீழ்ந்த தென்னவே[4] தூணின்வென்றி
இசைதிறந்[5] துயர்ந்த[6] கையா லெற்றின னெற்ற லோடுந்
திசைதிறந் தண்டங் கீறச்[7] சிரித்தது[8] செங்கட் சீயம்.

கொண்டுகூட்டு: நசைதிறந்து இலங்கப் பொங்கி 'நன்று! நன்று!!' என்ன நக்கு, விசைதிறந்து உருமுவீழ்ந்ததென்னத் தூணில் இசை

திறந்து உயர்ந்த கையால் எற்றினன்: எற்றலோடும், செங்கண் (உடைய) சீயம், திசை திறந்து அண்டங்கீறச் சிரித்தது.

பொருள்: (பிரகலாதன்சொன்னதைச் சோதிக்கும்) இச்சை (இரணியன் மெய்ப்பாட்டினல்) வெளியாய் விளங்க, உற்சாகங் கொண்டு, 'நல்லது! நல்லது!!' என்று (பரிகசித்துச்) சிரித்து, வேகமாக வெளிப்பட்டு இடிவிழுந்தாற்போலத் (தன் எதிரே நின்ற) தூணிலே (கோபத்தோடு) கையால் (ஓங்கி) அறைந்தான். அறைந்த அளவிலே, சிவந்தகண்களையுடையதொரு சிங்கம், (அவன் அறைந்த ஓசையினும் எத்தனையோ மடங்கு அதிகமான பேரோசையுண்டாக) எட்டுத்திசைகளையும் பிளந்து அண்ட கோளம் பிளவுபடும்படி (அவன் எளனச்சிரிப்புக் கெதிர்ச்சிரிப் பாகச்) சிரித்தது.

நசை - இச்சை. திறத்தல் - வெளிப்படுத்தல். பொங்குதல் - உற்சாகங் கொள்ளல் (தமிழகராதி). நக்கு - நகுதல் (- சிரித்தல்.) செய்து - சிரித்து. வென்றி - வெற்றி. இசை - கீர்த்தி. எற்றல் - அடித்தல். சீயம் - சிங்கம்.

இப்படலத்துக்கு உயிர்நிலையாயுள்ள இப்பாட்டின் கடையடியின் காம்பீரியம் கண்டு களிக்கத்தக்கது.

பாடபேதம்: [1] என்னப். [2] நக்கான். [3] விசைபிறந்து. [4] என்ன வோர். [5] இசைபிறந்து. [6] அமர்ந்த, அமைந்த. [7] கீறிச். [8] சிரித்ததச்.

அச்சிரிப்பைச் செவியுற்ற பிரகலாதன், அடங்கா மகிழ்ச்சி கொண்டு ஆடினன், பாடினன்; அழுதான், தொழுதான்:

அச்சிங்கத்தை இரணியன் 'அடா வெளியே வா' எனல்.

11 ஆரடா சிரித்தாய் சொன்ன வரிகோலோ[1] அஞ்சிப்புக்க
நீரடா போதா தென்று நெடுந்தறி நேடி[2] ஞயோ
போரடா பொருதி[3] யாயிற் புறப்படு புறப்ப டென்றான்
பேரடா[4] நின்ற தாளோ டுலகெலாம் பெயரப் போவான்.

கொண்டுகூட்டு: பேர் அடாநின்ற தாளோடு உலகு எல்லாம் பெயரப் போவான் (இரணியன்), 'சிரித்தாய் (ஆனநீ) ஆரடா? சொன்ன அரி கோலோ? அடா! நீர் போதாதென்று நெடுந்தறி நேடினயோ? அடா! போர்பொருதியாயின், புறப்படு, புறப்படு' என்றான்.

பொருள்: (சிங்கத்தின் சிரிப்பைச் செவியுற்ற பிரகலாதன் செயல்கள் இத்திறத்தனவாக, அச்சிரிப்பைக் கேட்ட) இரணியன், ‘சிரித்த நீ ஆரடா? (இந்தப் பையல்) சொன்ன விட்டுணுவா? அடா! நீ பீதியடைந்து (ஓடி ஒளிந்து) புகுந்த கடல் போதாதென்று தூணை(யும் ஒளிப்பிடமாக)த் தேடிக்கொண்டாயோ? அடா! நீ போர்புரிவாயானல், வெளியே புறப்படு (சீக்கிரம்) புறப்படு’ என்றான்.

அரி - திருமால். புக்க - புகுதல்செய்த - புகுந்த. தறி - தூண். நீர் - கடல். நேடுதல் - தேடுதல். பொருதி - பொருவாய் - போர்செய்வாய். பேர் - கீர்த்தி. அடுதல் - பொருந்துதல். அடாநின்ற - பொருந்திய. தாள் - முயற்சி - ஊக்கம். பேர் அடாநின்ற தாளோடு உலகெலாம் பெயரப் போவான் - புகழ்பொருந்திய (-கண்டோர் அதிசயித்துப் புகழும்படியுள்ள) ஊக்கத்தோடு உலகங்களெல்லாம் நிலைபெயரும்படி (திக்குவிசயமாகச்) சென்றவன் - இரணியன். இராவணன் திக்குவிசயஞ்செய்யக் ‘கொண்டதோ ருக்கம் மூளத் திசைதொறுங் குறித்து’ச் சென்றது ஊர்தேடுபடலம் ௨௧௧-ஆம் பாட்டில் கூறப்படுதல் காண்க.

பாடபேதம்: [1] அரிகொல்லாம். [2] நீட்டினையோ, தேடினையோ. [3] பொருவை. [4] பேரிடா.

அச்சிங்கம் அசுரசேனையனைத்தையும் அழித்துவிடப்,
பிரகலாதன் இரணியனை ‘இப்போதேனும் வணங்கு’ எனல்.

[இரணியன் வெளியேவா என்றவுடனே, காணப்படாமற் சிரித்த சிங்கம் காணும்படி தூணைப் பிளந்து தோன்றி அண்ட பகிரண்டங்களை அளந்திடல்போல வளர்ந்தது. அதன் பிடரிமயிர் பிரளயகாலாக்கினிபோன் றிருந்தது; அதன் பெருமூச்சுப் பிரசண்டமாருதத்தைப்பின்னிடச்செய்தது. சிங்கமுகமும் நகமும் உடையதாய் மானிடவுடல் படைத்திருந்த அந்த நரசிங்கம், இரணியனது ஆயிரவெள்ளமான அசுரசேனையின் ஒவ்வொரு வீரனுக்கும் ஒவ்வொருமுகமும் இவ்விருகைகளும் கொண்டு சிலரைத் தரையில் அரைத்தும் சிலரை வானமுகட்டில் அடித்தும் சிலரைக் கடலுள் அழுத்தியும் எஞ்சிய சிலரைப் பின்னும் பலவாறு புரிந்தும் கொன்றது. இரணியனும் பிரகலாதனும் தவிர, யாவரும் கொல்லப்பட்டனர். அந்த நரசிங்கத்தின்வரவை எதிர்கொள்வானய் இரணியன் வாளும் கேடகமும் தாங்கி வீரஆரவாரஞ்செய்து

மேருமலை உயிர்பெற்றுநின்றாற்போல நின்றான். அப்போது, பிரகலாதன், 'இப்போதேனும் எம்பெருமானை இறைஞ்சுவாயாக; இறைஞ்சினால், உன் குற்றங்களைப்பொறுத்து அருள்புரிவான்' என்றான்.]

இரணியன் 'இச்சிங்கத்தையும் உன்னையும் கொன்று பின்
என் வாளை வணங்குவேன்' எனல்.

12 கேளிது நீயுங் காணக் கிளர்ந்தகோ ளரியின் கேழில்[1]
தோளொடு தாளு[2] நீக்கி நின்னையுந் துணித்துப்[3] பின்னேன்
வாளினைத் தொழுவ தல்லால் வணங்குதல் மகளி ரூடல்
நாளினு முளதோ வென்னா வண்டங்க ணடுங்க நக்கான்

கொண்டுகூட்டு: 'இது கேள். நீ காணக் கிளர்ந்த கோளரியின் கேழ் இல் தோளொடு தாளும் நீக்கி, நின்னையும் துணித்துப் பின் என் வாளினைத் தொழுதல் (செய்வேன்) அல்லா(மல்) (இச் சிங்கத்தை வணங்கேன்). (யான்) வணங்குதல் மகளிர் ஊடல்நாளினும் உளதோ?' என்னா, அண்டங்கள் நடுங்க நக்கான்.

பொருள்: (இரணியன் பிரகலாதனைநோக்கி) 'நான் கூறுவதைக் கேள். நீ காண, இந்தச் சிங்கத்தின் கைகளையும் கால்களையும் (வெட்டிக்) களைந்து உன்னையும் வெட்டிப் பின்பு (உங்களிருவரையும் வெட்டிக்கொன்ற) என் வாளை வணங்குதல் (செய்வேன்) அல்லாமல் (நீ எம்பெருமானென்னும் இந்தச் சிங்கத்தை வணங்கேன்.) யான் வணங்குதல் மாதர் ஊடற்காலத்தும் இல்லை' என்று அண்டங்கள் நடுங்கும்படி (கோபத்தோடு கூடிய பரிகாசச்சிரிப்புச்) சிரித்தான்.

கிளர்தல்-எழுதல். கோளரி-சிங்கம்; கோள்-வலிமை, அரி-சிங்கம் எனக்கொண்டு வலிமையையுடைய சிங்கமெனலுமாம். கேழ்-ஒப்பு. துணித்தல்-வெட்டுதல். நாள், தினத்தைக் குறியாது பொழுதைக் குறித்தது. என்னா-என்று.

'ஊடலாவது - ஆடவரும் மகளிரும் இன்பந்துய்க்குநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும்பொருட்டு ஒருவரோடொருவர் கலாய்த்தல்; இது பிரணயகலகமெனப்படும். இன்சொல் முதலிய உபாயங்களால் தணிக்கக்கூடியநிலையைக் கடந்து வணங்குதலாகிய ஒருபாயத்தினாலன்றித் தணிக்கக்கூடாதநிலையையடைந்த ஊடல்முதிர்ச்சியில் இயல்பாக ஆடவர் மகளிரிடத்துக்கொள்ளும் வணக்கத்தையும் யான் கொள்ளும் இயல்பினனல்லேனென்று தனது வணக்கமின்மையை விளக்கினவாறு: ஆரணியகாண்டத்தில்

இராவணனுடைய கிரீடங்களை "மாதர் வலியகெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை" என்றதும் காண்க.' வை. மு. கோ.

பாடபேதம்: [1] கோளரியையின்று, கோளரியின் கேளார். [2] தோளும். [3] துணித்த.

நாசிங்கம் இரணியனைக் கொல்லல்.

[மேற்கூறியவாறு வீரமும் கோபமும் விளங்கச் சிரித்த இரணியன், நரசிங்கத்தை எதிர்த்தற்குச் சென்றான். செல்லவே, அவனை நரசிங்கமூர்த்தி, மிகப்பலவான கைகளாலும் கால்களாலும் சூழ்ந்து கட்டி அகப்படுத்தினான். அந்நிலையில், இரணியன் மகாமேருவொத்தான், நரசிங்கப்பெருமான் மேருவைச் சூழ்ந்த சர்வப்பிரபஞ்சத்தையும் போன்றான். தேவர் மனிதர் விலங்குகளாலும், இராப்பகலிரண்டினும், வீட்டிலும் வெளியிலும், மண்ணிலும் விண்ணிலும் நீரினும் நெருப்பினும், எவ்வகை ஆயுதங்களினும் சாவா வரம்பெற்றிருந்த இரணியனை, இறைவனான திருமால் தேவர் மனிதர் விலங்குகளிற் சேராத நரசிங்கமாய்ப் பகலும் இரவுமல்லாத அந்திநேரத்திலே, வீட்டின் உள்ளும் புறமு மல்லாத வாயிற்படியிலே, விண் மண் நீர் நெருப்பில்லாத தொடைமீதே கிடத்தி, ஆயுதமல்லாத நகங்களினாற் பிளந்து உயிர்போக்கித் தேவர்துயர் நீக்கினான்.

ஒளித்திருந்த பிரமன்முதலியோர் ஓடிவந்து நரசிங்கதரிசனம் செய்தல்.

அப்போது இரணியனுக்கு அஞ்சி ஒளித்திருந்த பிரமன் முதலோர் வந்து கூடினார்கள்: எங்கும் முகம் எங்கும் கை எங்கும் கால் எங்கும் உடலாய் எல்லாம் தானாயிருந்த சிங்கத்தைக்கண்டு அஞ்சினார்கள். அப்போது பிரமன் அந்த நரசிங்கமூர்த்தியைத் துதிப்பானானான்.

பிரமன் நரசிங்கமூர்த்தியைத் துதித்தல்..

'கடலிலே குமிழிகள்தோன்றி மறைதல்போலப் பல்லாயிர கோடியண்டங்கள் உன்னிடத்தே (உன் விராட்புருடமேனியிலே) தோன்றி மறைகின்றன.]

13 பேரை யொருபொருட்கே பல்வகையாற் பேர்த்தெண்ணுந்
தாரை நிலையை தமியை[1] பிறரில்லை
யாரைப் படைக்கின்ற தியாரை யளிக்கின்ற
தாரைத்[2] துடைக்கின்ற தையா! வறியேமால்!

நோன்டுகூட்டு: ஒரு பொருளுக்கே பேரைப் பல்வகையால் பேர்த்து எண்ணும் தாரை (ஆன) நிலையை. தமியை. பிறர் இல்லை. படைக்கின்றது யாரை? அளிக்கின்றது யாரை? துடைக்கின்றது ஆரை? ஐயா! அறியேம்!(கூறு).

பொருள்: '(நீ, வேறுபொருள் யாதுமின்றி ஒரே பொருளா யுள்ளாய். அப்படிப்பட்ட நீயாகிய) ஒருபொருளுக்கே பேரை (அப்பொருள் பலநிலைமைகளுறல் காரணமாக)ப் பலவகையாக வேறுபடுத்தி(ப் பலவாக) எண்ணப்படுகின்றஒழுங்கான நிலைமையை யுடையாய். (ஏகனுய்த்) தனியனுயிருக்கின்ருய். (நீ அன்றி உன் னேடுள்ளார்) பிறர் (வேறெவரும்) இலர். சுவாமி! (உன்னையல்லா மல் ஒன்றுமில்லாமல் எல்லாமான நீ) படைக்கின்றது (உன்னை யல்லாமல்) யாரை? காக்கின்றது (உன்னையல்லாமல்) யாரை? அழிக்கின்றது (உன்னையல்லாமல்) யாரை? (உன் தொழில்முறை யை) யாம் அறியேமாயிருக்கின்றேம்* ஐயனே! (கூறுவாயாக).

பேர்த்தல் - வேறுபடுத்தல். தாரை - ஒழுங்கு. தமி - தனி. அளித்தல் - காத்தல். துடைத்தல் - அழித்தல்.

பிரபஞ்சத்தையும் பிரபஞ்சகாரணமான பரம்பொருளையும்பற்றிய கம்பர்கருத்துக்கள், கம்பராமாயணசாரம் பாலகாண்டம் முதற்பாட்டுரை யில் கம்பர் 'கடவுட்கொள்கை'யென்ற தலைப்பின்கீழும் அயோத்தியாகாண் டம் 'கரியமாலினும்' என்ற பாட்டுரையிலும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. கம்பர் சமயவாதிகளுள் ஒருவரல்லரென்பதும், அவர் சமயாதீதக்கொள்கை யினரென்பதும் அந்த விவரணங்களில் நிலைநாட்டப்பட்டிருக்கின்றன. சமய வாதக்கொள்கைக்கும் சமயாதீதக்கொள்கைக்கும் உள்ள வேற்றுமை பின் வருவதனுல் விளங்கும்.

கசேந்திரன் என்னும் யானை ஒரு முதலையினுற் கௌவப்பட்டு மூலமே! என்று ஓலமிட்டபோது முன்வந்து காத்ததனுல் திருமாலே பரம்பொருளென வஸ்துநிர்ணயஞ்செய்யும் வைணவசமயவாதியரையும்,- அவரை மறுத்து, அப்படியன்று, மூலமான சிவன் தன் அதிகாரத்துக்குட்பட்ட திருமாலை ஏவி அந்த யானையைக் காத்ததனுல், திருமால் பரம்பொருளாகானென்று வாதிக் கும் சைவசமயவாதியரையும்,-ஆலகாலவிடம் உலகத்தை அழிக்கலானபோது அதனையுண்டு உலகத்தைக் காத்ததனுல் சிவனே பரம்பொருளென வத்து நிச்சயஞ்செய்யும் சைவசமயவாதியரையும்,-அவரை மறுத்துச் சிவனைப் பாத் திரமாகக்கொண்டு விடத்தை உண்டது திருமாலாதலால், சிவன் பரம்பொரு ளாகானென்று வாதிக்கும் வைணவசமயவாதியரையும் போலாது, கம்பர், பரம்பொருள் முதலைகொல்லப்பட்டபோது திருமாலிடத்தும் விடமுண்ணப்

* The ways of Providence are inscrutable.

பட்டபோது சிவனிடத்தும் முனைந்துநின்றதென்றும் அவ்வப்போது பரம் பொருள் முனைந்துநிற்கப்பெற்றவரைப் பரம்பொருளென்பது உபசாரமே யன்றி உண்மையன்றென்றும் கொண்ட கொள்கையுடையவர்.

கம்பர், இந்தப்படலத்தில் முன் திருமால் உள்பட்ட திரிமூர்த்திகளை இரணியன் தன் ஆட்சிக்குள் அடங்கச்செய்திருந்தானென்றார். இப்போது இரணியனை அழித்த நரசிங்கம் திருமாலென்றார். இது முன்னுக்குப்பின் முரண்பட மொழிந்ததாயுள்ளது. இம் முரண்பாடு தோற்றத்திலுள்ள தன்றி உண்மையில் இல்லை. எவ்வாறெனில், கூறுவாம். திருமாலைத் தோற்று ஒடுங்கச்செய்த இரணியன் சிவனும் திருமாலும் பிரமனும் எல்லை காண முடியாத ஐம்பெரும்பூதங்களின் வலிமைமுழுதையும் தானொருவனே அடைந்திருந்தானென்று முன்பு கூறியுள்ளார்.* அப்போதைய பூதவரம்பறி யாத திருமாலுக்கும் இப்போதைய நரசிங்கமான திருமாலுக்கும் வேற் றுமையுண்டென்பது கூறவேண்டியதில்லை. அவ்வேற்றுமைக்குக் காரணம் பரம்பொருள் அச் சமயத்தில் இரணியன்பாலும் இச்சமயத்தில் திருமால் பாலும் முனைந்துநின்றதாம்.

பசு பதி பாசமெனச் சைவரும் ஜீவேச்வரஜகத் தென வைஷ்ணவரும் மூலப்பொருள் மூன்றென்று கூறுதற்கும் இந்தப் பாட்டில் முன்னிரண்டடிக ளில் 'ஒரு பொருட்கே' 'தமியை' 'பிறர் இல்லை' யென ஒன்றேயென்று வற்புறுத்துக்கூறுதற்கும் சமாதானம், பரம்பொருள் பிரிவில்லாத சமட்டி நிலையில் ஒன்றாகவும் பிரிவுள்ள வியட்டிநிலையில் மூன்றாகவும் உள்ளதென்க. 'மூன்றுகவடாய் முளைத்தெழுந்த மூலம்' என்பது இங்கே கருதத்தக்கது.

இப்பாட்டின்படி இறைவனொருவனன்றி எப்பொருளுமில்லையாதலால், இப்போது நரசிங்கத்தைப் படைத்ததும் பிரகலாதனைக் காத்ததும் இரணி யனையழித்ததும் இறைவனே யென்பதும் இம்மூவரும் இறைவனே யென்ப தும் போதரும். இந்தநிலை பரநிலை. இந்தநிலையிலேதான், வாலி, இறைவனான இராமனைப் 'பாவம் நீ தருமம் நீ பகையும் நீ உறவும் நீ- மூவர் நீ முதல்வனீ முற்றும் நீ மற்றும் நீ' என்றான். இந்தப் பரநிலை வேறு, இகநிலை வேறு. பரநிலையில் பாவ புண்ணியங்களையும் பாவ புண்ணிய பலன்களையும் கடந்து பரம்பொருளோடு ஒன்றுபடும் உயிர்கள், இகநிலையில் பலவாய் அவையவைக ளின் கருமபலன்களை அவையவை அனுபவிக்கக்கடவனவாயிருத்தல் கருத் தில் ஊன்றிப் பதியவைத்தற் குரியது.

---

* காதுங் கண்ணுதல் மால்அயன் கடைமுறை காணாப்
பூதங் கண்ணிய வலியெலாம் ஒருதனி பொறுத்தான்
இப்படலம் முதற்பாட்டு.

தன்காலத்தில் 'மால்முதலோர்கள் அகந்தையைத் தவிர்த்த அகந்தை* யுடையவனாயிருந்த தக்கனைச் சிவன் வீரபத்திரனாகிக் கொன்றதுபோலத் தன்காலத்தில் அத்தகையனாயிருந்த இரணியனைத் திருமால் நரசிங்கமாகிக் கொன்றது நிக்கிரகரூபமான கிருபை அல்லது மறக்கருணை யென்றும் பிரகலாதனைக் கொல்லப் படாமற் காத்தது அனுக்கிரகரூபமான கிருபை அல்லது அறக் கருணையென்றும் கூறப்படுதல் காண்க.

பாடபேதம்: [1] தனியைதம்மிற். [2] தியாரை.

நரசிங்கப்பெருமான் பிரகலாதனுக்குப் பெருங்கருணைபுரிந்து முடிசூட்டல்.

[இவ்வாறு பிரமன் துதித்தபின் நரசிங்கமூர்த்தியை யெல்லா ரும் வணங்கினார்கள். அப்பெருமான் கோபந்தவிர்ந்து சாந்தம் அடைந்து அபயமளித்தான். பின்பு பிரகலாதனை அருட்கண்ணால் நோக்கி 'உன் அன்புக்கு உவந்தேன். உனக்கு வேண்டுவதைக் கேட்டுக்கொள்' என, 'இதன்முன் யான் பெற்ற நன்மைகளுக்கு எல்லையில்லை. இனிப் பெறவேண்டுவதும் உளதோ? யாதாயினும் பெறவேண்டுவேனாயின், அஃது உன் அன்பே†' என, 'என் அன்ப ருள் நீ முதல்வனாய், என்னைப்போல என் அன்பர்களெல்லாராலும் வணங்கப்பெற்று வாழ்வாயாக' என்று அருள்செய்து அவனுக்குத் தானே முடிசூட்டியருளினான். இது, முன் நிகழ்ந்தது. எம் பெருமானே! யான் கூறியவாறு சீதையை விடுகலைசெய்யா யெனில், விளைவது தீமையே யென்று விபீடணன் இராவண னுக்குச் சொன்னான்.]

இரணியன்வதைப்படலம் முற்றியது.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

* திருக்குற்றாலத்தலபுராணம்.

† பிரகலாதனது பேரன்பு, பின்வரும் பெரியபுராணப்பாட்டை நினை வுறுத்துகின்றது:

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்,
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்,
கூடும் அன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.

ஸ்ரீ:

# புல்லையந்தாதி.

[௩௨௨-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

94 காதல்பெரு குஞ்சையோக மாதரிரு கொங்கைமீது
காமவெறி கொண்டுலாவு சிந்தையாகிப்
பாதகமும் வஞ்சமான சூதுகள வுஞ்செய்பாவி
பான்மன திரங்கியாள்வ தெந்தநாளோ
மாதவ முகுந்தகேச வாசெக மளந்தபாத
மாமலர் மடந்தைமேவு செம்பொன்மார்வா
சீதமதி வந்துலாவு சோலைசெறி யும்புல்லாணி
சேரரசு வந்துவாழ் சுகந்தமாலே.

95 கந்தமு மிகுந்துவீசு கொங்கைகள் குலுங்கநீடு
கண்கள்சுழல் வஞ்சமாய வஞ்சிமார்கள்
தொந்தமிட வுஞ்சையோக விஞ்சையி லுழன்றுமாதர்
தொண்டனென நின்றெனுவி மங்குவேனை
பைந்துளவ நந்தகோப னந்தன முகுந்தபாத
பங்கய மகிழ்ந்துநீ வழங்குவாயே
யைந்தரு வனத்தவேதன் வந்துபர வும்புல்லாணி
யம்பதி வளர்ந்ததேவர் தம்பிரானே.

96 தம்பமென வுன்றனும மந்திரம தொன்றுபாடு
தண்டமிழின் விண்டிடாத புவிப்பேயன்
செம்பவள மென்றவாய் மடந்தையர் புணர்ந்தலீலை
சிந்தையி னினைந்துமேனி தவிப்பேனை
நம்படிய னென்றன்மீ திரங்கியரு ளும்க்ருபாள
நந்தனி முகுந்தபானு குலத்தோனே
யம்பனித டங்கனவ ளம்பெருகு பூம்புல்லாணி
யம்பதியி லெந்தநாளு மிருப்போனே.

97 இருப்பிலே தனியிருந்து நெருப்பிலா குதிசொரிந்து
மிருட்டுநேர் குகைபுகுந்து நெடுநாளும்
பொருப்பிலே றியுமலைந்து பொசிப்புமா றியுமடர்ந்த
புனத்திலே வெயிலும்வந்து..................

விருப்புமா யசனமுண்டு சுகிக்கலா மிகபாங்கள்
விளக்கமா யடைவதென்று மெளிதாகத்
திருப்புலா ணியின்முகுந்தர் தருப்பைமீ தினிலுவந்து
திருக்கண்மே விய......... நினைவீரே.

98 நினைவுகள் மறந்துவாயு முளறவு மலஞ்சலாதி
நெகிழவு மிருண்டகாலன் வருநாளின்
மனைவியரு மைந்தரான வருமுடனி ருந்தழாமுன்
வசையொடு பிணம்பொலாதை யெடெனுமுன்
தினகர குலங்கள்வாழ மருவுரகு லிங்கதிப
திலகசன கன்குமாரி மணவாளா
வெனவுரைசெய் தும்புல்லாணி யரசினை வணங்கநாளு
மிகபரவை குந்தநாடு மடைவீரே.

99 அடையவனி லங்கையூரி லரசுசெய வந்தராவ
ணனையடர வென்றுவாகை புனைதோளா
யிடாது புரிந்தென்மீதி லெதிரியென வந்தபேரை
யிடறியுன தன்பன்மீதி லருள்வாயே
........................................
........................................
கடகரி பயந்துமூல மெனவுரைசெ யன்பநீடு
கமலைமரு வும்புலாணி யுறைவோனே

100 ஓநமோ நமவாதி யானவா சகமும்வேதன்
ஓதுநான் மறைகடேடு பெருமானே
மோநமா தவர்களுடு சோதியே சரணமாதி
மூலமே கிருபை யேசெய் யென்மீதே
சாநகீ ரமணராம ராகவா வகிலமாது
சாபமோ சனவெ நாளு மேன்மேலும்
வாந.........தே டியபுல்லாணி வாழ்கமா நிலமுழுதும்
வாழ்கவே யருள்குலாவும் பொன்மாலே.

புல்லையந்தாதி முற்றும்.

வித்வான். ரெ. இராமையங்கார்,
தலைமைத்தமிழாசிரியர்,
சௌராஷ்ட்ர ஹைஸ்கூல், மதுரை.

ஸ்ரீ:

# திருப்புல்லாணி எம்பெருமான்பேரில் வாகனக்கவிகள்.

ஆசிரியவிருத்தம்.

மணிமருவு மெய்யெலாம் வெள்ளையா கின்றதது
வண்மைபெறு சங்கமல்ல
வாளரவ முண்பதது வாயுவல கலைகள்
வளர்ந்திடுங் ககனமல்ல
அணியுமுட லொருவேளை வற்றிடும் பெருகிடும்
ஆறுகள் தடங்களல்ல
அமுதங் கொடுக்குமது பாற்கடலு மல்லஇவை
ஆனதொரு வாகனத்தில்
நணுகியிமை யோர்மகிழ் தென்திருப் புல்லாணி
நாதர்தெய் வச்சிலையினர்
நங்கையிரு தேவியொடு தெருவீதி தன்னின்முதல்
நாட்பவனி கொண்டருளினர்
இணையரிய சேவையைத் தொழுதுதொழு துள்ளத்தை
யீயாத பேர்களில்லை
இங்கிதத் தினையறிந் திங்கிதைச் சொன்னபேர்
இகபரம் பெறுவார்களே.

(இது சந்திரப்பிரபை வாகனம்.)

கொங்கை தந்தவள் தாயிலைப் பேயதாம்
குடித்த தும்முலைப் பாலிலை நஞ்சுகாண்
பங்க யாசனன் அன்னத்தைக் கைக்கொண்டான்
பசித்து நீயிந்த மண்ணை யிரந்துண்டாய்

அங்க மெங்குங் கறுத்துக்கண் பூத்துப்போய்
அரவிற் றூங்கு முனக்குமிந் நாளிலே
சிங்கமேறத் திறமு முண்டாச்சுதோ
திருப்புல் லாணித்தெய் வச்சிலை மாயனே.

ஒரு மாலைமாற்று.

நேய னுமத நாகச காயகா
வாய மாயெணி லாபு யலாயமே
மேய லாயபு லாணியெ மாயவா
காய காசக நாதம னுயனே.

இக்கவிகளை ஆக்கியோர் இன்னாரெனத் தெரியாது. என் பிதா சொல்லக் கேட்டிருக்கிறேன்.

ஸ்ரீ அநந்தகிருஷ்ணையங்கார்.

---

அச்சிடப்போகிற திவ்யதேசப்பாமாலையிலிருந்து எடுத்தெழுதிய

## திருப்புல்லாணிப்பாடல்கள்.

[ஸ்ரீ வானமாமலைமடம் ஆஸ்தானவித்வான் அபிநவகாளமேகம்
ஸ்ரீ அநந்தகிருஷ்ணையங்கார் இயற்றியவை.]

வெண்பா.

இத்தலத்தி லன்பர்க் கினிய வசனிகுணப்
பத்த ரிடராம் பணிக்கசனி—பத்தியிலாத்
தீயார்க்கு மிக்கசனி தென்றிருப்புல் லாணியில்வாழ்
தாயாம் பதுமா சனி.

விருத்தம்.

செம்மலி லானென் றெண்ணித் தீநர கமைத்திட் டாலென்
செம்மைவைகுந்தத்தேற்றிச்சேக்கையங்கமைத்திட்டாலென்
மும்முறை சேது மூழ்கி முதல்வபுல் லாணி நாதா
இம்மையே யுனக்காட் பட்டிங் கிருந்தபின் பென்னை நீயே.

---

# பாஞ்சராத்திரம்.

[௩௧அ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

பகவான்:—அது அப்படியே (மனதுக்குள்)

க்ஷேத்யாந்தே வநபர்ணஶய்யா ச ஹாநிர்தௌ
ராஜ்யப்ரம்ஶோ த்ரௌபதீதர்ஷணம் ச ।
வேஷாந்யத்வம் ஸம்ஶ்ரிதாநாம் நிவாஸ:
ஸர்வம் ஶ்ராவ்யம் யத் க்ஷமோ ஜ்ஞாயதே ஸௌ ॥

எனது பொறுமையைப் பிறர் அறிவார்களானால், தரையில் இலைகளிற் படுத்துக்கொள்ளுதலும், ராஜ்யத்தை இழந்ததும், துரோபதைக்கு நேர்ந்த அவமானமும், (நாங்கள்) வேஷம் மாறுடிக் கொண்டதும், பிறரையடுத்துக் காலங்கழித்தலும் எல்லாம் நல்லவையாகவே முடியும்.

வேலையாள்:—[புகுந்து] மகாராஜா மேன்மைதங்கி வாழ வேண்டும்.

அரசன்:—துர்யோதனன் என்ன குறும்புசெய்கிறான்?

வேலையாள்:—துர்யோதனன்மட்டுமல்ல; உலகிலுள்ள அரசர்கள்யாவரும் வந்திருக்கிறார்கள்.

த்ரோணஶ்ச பீஷ்மஶ்ச ஜயத்ரதஶ்ச
ஶல்யோऽங்கராஜ: ஶகுநி: க்ருபஶ்ச ।
தேஷாம் ரதோத்கம்ப சலத்தாகை
ஹந்யாமஹே த்வஜைரேவ வயம் ந பாணை: ॥

துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன், சல்லியன், அங்கராஜன் (கர்ணன்), சகுனி, கிருபர் (இவர்கள் யாவரும் வந்திருக்கிறார்கள்.) அங்குமிங்கும் ஓடும் தேர்களையுடைய அவர்கள் அம்புகளாலின்றி அவர்களுடைய தேர்க்கொடிகளாலேயே, நாம் தாக்கப்பட்டோம்.

அரசன்:—(எழுந்திருந்து கைகூப்பிக்கொண்டு) பெரியோரான் கங்காபுத்திரருங்கூட வந்திருக்கிறாரா ?

பகவான்:—(மனதுக்குள்) நல்லது; விராடவரசர், துன்பம் நேர்ந்தபோதும் ஆசாரத்தை விடவில்லை.

க்லிஷ்டம் வஹந்த்யஸம்ப்ராப்தா: காலேநாம் ப்ராப்தகாலதா:।
ஸம்யுக்தா தீனா ப்ரதிஜஹாதி ஸ்வதாரணம் க்ரியதே ஸ்திதை:॥

ஓ! குருகுலத்துக்கே குருவுங்கூட என் வந்திருக்கிறார்? பிரதிஜ்ஞையின் கெடு முடிந்துவிட்டது என்று எனக்கு நினைப்பூட்டுகிறார்போலும்.

அரசன்:—யாரிங்கே ?

வேலையாள்:—[புகுந்து] மகாராஜா ! வெற்றிபெறுக.

அரசன்:—தேர்ப்பாகனை அழைப்பாயாக.

வேலையாள்:—உத்தரவு. [வெளியேசெல்லுதல்.]

தேர்ப்பாகன்:—[புகுந்து] வேந்தே வெற்றிபெறுக.

அரசன்:—

ரதோ நய ஶீக்ரம் மே ஶ்ராந்த: ப்ராப்தோ ரணாதிதி:।
தோஷயிஷ்யே ஶரைர்பீஷ்மம் ஜேஷ்யாமீதி து நாஶய:॥

என்னுடையதேரை விரைந்து கொணர்வாயாக; யுத்தத்தில் மிகவும் சிறந்தவரான விருந்தினர் வந்திருக்கிறார். பீஷ்மரை அம்புகளாற் களிக்கச்செய்வேன்; வெல்வேனென்பதை நான் மனத்தாலும் கருதவில்லை.

தேர்ப்பாகன்: - மஹாராஜா உத்திரவுப்படி. எசமானே !

வ்யூஹானாம் பேதனாப்யஸ்தே ரதே வரீயஸோ ரத:।
ரதசர்யாம் விஶிஷ்டாம் தே தர்ஶயாயோத்தரோ கத:॥

எதிரிகளின் வியூகத்தை (படைகளின் அணிவகுப்பை)ச் சிதற அடிப்பதில் பழக்கப்பட்டதான உமது தேரில் தேரின் சிறப்பை விளக்குதற்காக உத்தரன் ஏறிச் சென்றிருக்கிறான்.

அரசன்:—ஏன் உத்தரன் போயிருக்கிருன்?

பகவான்:—குமாரனை நிறுத்துங்கள், நிறுத்துங்கள்.

ஊறணித ஒூணஹொஷொ யூஜீக்ஷஸ வாஜா
ஹஷஹதி நகஸிஜஷ ஸஜிகூஷொ ரணாநீஃ।
ஊயஞ வஸிஹாசெ யாதவிாஷூாநகிஂஷி
ஹஷஜூ வஸிஷவாஜ தெயூஜஷொஷாநு ஷுவிஶி॥

அவன் சிறுவனுயிருப்பதால், போரில் நல்லவை தீயவைகளை அறியான்; யுத்தத்தில் ஒருகால் உயிர் துறக்கவும் துணிவான், அருகில் இருக்கும் போர்த்தீயானது, நெருங்கினவர்களை எரித்துவிடாதென்பதில்லை; திருதராஷ்டிரகுமாரர்கள், எதிரி பெரியோனு? சிறியோனு? என்பதைக் கவனிக்கமாட்டார்கள்; யுத்தத்தில் இவ்வகையான கஷ்டங்கள் இருக்கின்றன என்றுமட்டும் சொல்லவந்தேனேயொழிய, உமது புதல்வனைப் பழிக்கவேண்டுமென்று சொல்லவில்லை; உம்மிடம்வைத்த நட்பின்மிகுதியாற் சொல்லுகிறேன்.

அரசன்.—வேறுதேர் ஆயத்தமாயிருக்கட்டும்; அதில் ஏறிக்கொண்டு நானே போர்க்குச் செல்வேன்.

தேர்ப்பாகன்:—கட்டளைப்படி.

அரசன்:—அல்லது நீ இங்கேவா.

தேர்ப்பாகன்:—அரசே! இதோ வந்தேன்.

அரசன்:—

தஜிஷாநீஂ கூஶோஸூ கிஂ நவாஹிதவாநு ஈயஜ।
ஊநூஜூாதொஸிகிஂ தெந நாஜூாஂஸாஈயிஹவாநு॥

கைதேர்ந்தவனுன நீ ஏன் தேரை நடத்திக்கொண்டுபோகவில்லை? குமாரனுல் தடுக்கப்பட்டனையா? அல்லது நீயாகவே அவ்விதம் செய்தாயா?

தேர்ப்பாகன்:-அரசே! மன்னிக்கவேண்டும். தேரில் குதிரைகளைப்பூட்டி நானே ஓட்டிப்போகச் சித்தமாயிருந்தேன்; குமாரன்,

கிஞ்ச தஸ்வஸிஹாஸாய-ம் கிஞ்ச தத்ராஷிகெள ஸமழு।
உஜா திக்ருஉு ஸாரயெ்ு விநியுக்தா ஹுஹஞஊா॥

என்னை விலக்கிவிட்டுத் தேரைச்செலுத்தும்படி "பிருகந்நளை"யை ஏவினன்; என்னை ஏளனஞ்செய்யவோ, தேரையோட்டுவதற்குப் 'பிருகந்நளை'யிடம் திறமை நிரம்பவும் இருக்கிறதென்றோ, அல்லது தானகவே தேரைநடத்தலாமென்றோ, [இவ்விதம் குமாரவரசன் செய்திருக்கிறுன்.]

அரசன்:—என் பிருகந்நளை ?

பகவான்:—அரசே! தாங்கள் பரபரப்புக்கொள்ளவேண்டாம்.

யஷிஷுவகெ்ாஊுத ரெணு ஜுஷி-நம்
ரயம் ஸஜாஷுாய ம்தா வு்ஹஞஊா।
வாரா நு க்ஷணெ நெ-ஷிரவெ நி-வாரயநு
விநாவி வாணாநு ரயமெஉவ ஜெஷு்தி॥

பிருகந்நளை தேரில் ஏறிக்கொண்டு போயிருப்பாளானுல், சக்கிரங்களால் கிளப்பட்ட தூளிகளாலேயே சூரியனைமறைத்து ஒரு நொடிப்பொழுதில், தேர்க்கால்களின் ஒலிகளாலேயே தேரே எதிரிகளை வென்றுவிடும்; [அவர்களைவெல்லப் பாணங்களை அவன் எய்யவேண்டியதில்லை.]

அரசன்:—ஆதலால் வேறுதேர் சித்தஞ்செய்யப்படட்டும்.

தேர்ப்பாகன்:—கட்டளைப்படி. [வெளியே செல்லுதல்.]

வேலையாள்:—[புகுந்து] குமாரவரசரின் ரதம் முறிந்துவிட்டது.

அரசன்:—ஆ! உடைந்துவிட்டதா ?

பகவான்:—எப்படி முறிந்தது ?

வேலையாள்:—மகாராஜா! தயவுசெய்து செவிகொடுக்கவேணும்.

ஹஹஉஹிஷாஜாஹிஜெஜஷ்ராஹிஷாஷுவயஃவரெஃ।
ஹஜெூா மஹநஜொஹெந ஶுஸா நாஹிஉவொ ரயஃ॥

போர்புரிவதில் தேர்ந்தவர்களான பகைவர்களால் குதிரைகள் செல்லும் வழியானது வலிந்து தகையப்பட்டபோது, காட்டில் புக வேணுமென்ற கருத்தோடு சுடுகாட்டில் தேர் நுழைந்து முறிந்து விட்டது.

பகவான்:—(மனதுக்குள்) அங்கேதான் "காண்டீவம்" இருக்கிறது. (வெளிப்படையாக) அரசே!

நிமித்தம் கிம்விசார்த்வனம் ஶ்மஶாநாபிமுகேவ ரதே।
யாதா[illegible]ராஷ்ட்ராஃ ஸ்தி தா யத்ர ஶ்மஶாநம் தத்பவிஷ்யதி॥

இரதம் சுடுகாட்டைநோக்கிப் போகும்போது பின் நிகழப் போகிற நிகழ்ச்சி நமக்கு முன்பே தெரிவிக்கப்பெற்றது; எங்கே திருதராஷ்டிரபுத்திரர்கள் வந்திருக்கிறார்களோ, அந்த இடம் (அவர்களெல்லோரும் போரில் உத்தரனால் அடிபட்டு மடிவார்களாகையால்) சுடுகாடாகவே மாறப்போகிறது.

அரசன்:— அகாலத்தில் (நான் வியசனத்துடனிருக்குங்காலத்தில்) தங்களுடைய இந்த வசனமானது எனக்கு வருத்தத்தைக்கொடுக்கிறது.

பகவான்:—கோபங் கொள்ளற்க; நான் விளையாட்டுக்காவது இதற்குமுன் பொய்யுரைத்ததில்லையே!

அரசன்:—அது சரியே. (வேலையாளைநோக்கி) அடே! மறுபடியும் போய்ச் சங்கதிகளைத் தெரிந்துவா.

வேலையாள்:—மகாராஜா உத்திரவுப்படி; [வெளியே செல்லுதல்]

அரசன்:—

கோ நு வர்த்துஷ ஸஹஸா கம்பயந்நிவ மேதிநீம்।
நதீஸ்ரோத இவாவித்த: க்ஷணாத் ஸம்வர்த்ததே த்வநி:॥

ஜ்ஞாயதாம் ஶப்த:।

ஆற்றுவெள்ளம்போல் வக்கிரமாய்த் திடீரென்று பூமியையே அலைப்பதுபோல் கேட்கப்படுகிற முழக்கம் எதனாலென்று அறிந்துவா.

வேலையாள்:—[புகுந்து] மகாராஜா வெற்றிபெறுக. சற்று இளைப்பாறின குதிரைகளுடன் சுடுகாட்டிலிருந்து திரும்பிவந்த குமாரனுல்,

பகவான்:—[மனதுக்குள்] இவன் என்னைப் பொய்யனுகச் செய்யக்கூடாதே!

அரசன்:—குமாரனுல் என்னசெய்யப்பெற்றது?

வேலையாள்:—

க்ருதா நீரா நாகா: ஶரஶதநிபாதேந க்ஷதிஜா
ஹயா வா யோதா வா ந வஹதி ந கஶ்சிச்சரஹதம்।
ஶரைஸ்ஸ்தம்பீஹ்ருதா: ஶரவர்ஷிகா: ஸ்யந்தநவரா:
ஶரௌகக்ஷுண்ணா மார்கா: ஸ்ரவதிவ தநுர்பாணவர்ஷம் ஶரந்நதீவ॥

யானைகள் பாணங்களாலடிக்கப்பட்டுச் சிவந்தவைகளாயின; புரவிகளும் காலாட்களும் சரங்களால் அடிபடாமல் இருக்கவில்லை; போகும் வழிகளும் பாணங்களால் தடைபட்டன; வில்லானது அம்புமழையைப் பொழிகிறதுபோலும்.

பகவான்:—[மனதுக்குள்]

ஸதக்ஷயதூணீத்வம் யேந ஶக்ரஸ்ய காண்டவே।
யாவத்ய: பதிதா தாராஸ்தாவந்த: ப்ரேஷிதா: ஶரா:॥

இது அக்ஷயதூணியின் மகிமையே! முன்பு காண்டவ வனத்தை எரித்தகாலத்தில், நெருப்பை அணைப்பதற்கு இந்திரனுல் எவ்வளவு நீர்த்தாரைகள் சொரியப்பட்டனவோ, அவைகளைத் தகையுமாறு, அத்தனைபாணங்கள் அந்தத் தூணியிலிருந்து எய்யப்பெற்றன.

அரசன்:—எதிரிகளின் நிலைமை என்ன?

வேலையாள்:—எனக்கு நேரில் தெரியாது; அங்குச்சென்று அறிந்துவந்தவர்கள் சொல்லுகிருர்கள்:

யதா³வேணீரஷம் த்³ரோணஸ்த்யஜதி வத்⁴யா ப்ரதிமுகோ²
யுவ்ஜே பா³ணம் த்³ருஷ்ட்வா க்ருதமிதி ந பீ⁴ஷ்ம: ப்ரஹரதி।
ஶரைர்பி⁴ந்ந: கர்ண: க்ஷிதிமிதி வா தே³ந்யே ந்ருபதயோ
ஹயேஷ்வேகோ பா³லஸ்த்வபஸரஸிநோ⁴ ப்ரஹரதி॥

உத்தரனுடைய தேரிலிருந்து உண்டான விற்சத்தத்தைக் கேட்டு இது அதுவே என்றறிந்து துரோணர் போரிலிருந்து திரும்பி விட்டார்; தன்கொடியில் வேறொருவனுடைய பாணத்தைப் பார்த்துப் பீஷ்மர் சரங்களை எய்யவில்லை; கர்ணனோ பாணங்களால் முறிய அடிக்கப்பட்டான்; பயங்கரமான சமயத்திலும் அபிமன்யு மட்டும் குழந்தையாதலால், ஒன்றையும்நோக்காமல் போர் புரிகிறான்.

பகவான்:—[தனக்குள்] குழந்தை அபிமன்யு இங்கே என் வந்தான்? [வெளிப்படையாக] ஓ! அரசரே! இரண்டுவம்சங்களுக்கும் ஒளியாகிற சுபத்திரைபுதல்வன் போர்நடத்துகிறானென்றால், வேறொரு பாகனை அனுப்பவேண்டும். அவனுடன் எதிர்த்துச் செல்லப் பிருகந்நளை வலியற்றவள்.

அரசன்:—தாங்கள் அப்படிச் சொல்லக்கூடாது.

பீ⁴ஷ்மம் ராமஶரைரபி⁴ந்நகவசம்
த்³ரோணம் ச மந்த்ராயுத⁴ம்
க்ருத்வா கர்ணஜயத்³ரதௌ² ச விமுகௌ²
ஶேஷாம்ஶ்ச தாம்ஸ்தாந்ந்ருபாந்।
ஸௌப⁴த்³ரம் ஶ்வஶுரே நயஷ்டிபதிகம்
பீ⁴த: பிதா³ஸைந்யவாக்
ஸம்ஸ்ப்ருஷ்டாபி வபஸ்த்ராவஸஷ்ட்ரஶம்
தாம்ஶ்ம் வயோரக்ஷதி॥

பரசுராமனுடையபாணங்களாலும் தகர்க்கப்படாத கவசமணிந்த பீஷ்மரையும், மந்திரங்களையே படைக்கலமாகவுடைய

துரோணரையும், கர்ணன், ஜயத்திரதன் இவர்களையும் மற்றுமுள்ள அரசர்களையும் போரிலிருந்து விலகும்படி உத்தரன் செய்தானே; அவன், அர்ஜுனனுடைய குமாரன் என்று தகப்பன் பெயரைக் கேட்டு, அபிமன்யுவுடன் போர்செய்யாமலிருப்பானு? அல்லது அபிமன்யுவுடன் நட்புச்செய்துகொண்டாலும், அவர்கள் இருவர்களுடைய வயதும் ஒத்திருப்பதால் அதுவும் தகுதியானதே.

வேலையாள்:—குமாரனுடைய இந்த ரதமானது,

ஆருஃஷிதோ ஞூஃதி யாவதி நெ ஃொதொ
  ந ஞூாவ்ய யஷீயதி நெஹூதி வி்ஞகதஃஷு।
ஆஸஹஸஃஜிவவுஃ வஸிவதஃாநொ
  யொஹாவஷெஜிவ தஸ்ய ஈயஃ கரொதி॥

தேர்ப்பாகனுல் குதிரைகளின்கடிவாளத்தைப்பிடித்துத் தேர் நிறுத்தப்பட்டாலும், நிற்காமல் சுழல்கிறது; கடிவாளத்தை விட்டுவிட்டால் மெள்ளப்போவதில்லை, ஒரே ஓட்டமாக ஓடுகிறது; சமயம்வந்தபோது எதிரியின் தேரை எதிர்க்கவில்லை; எதிரிக்குச் சமீபத்திலிருக்கும்போது, அங்குமிங்கும் நகர்கிறது; (அந்த ரதமானது) தேர் ஓட்டுவது இவ்விதமென்று பிறருக்கு உபதேசிப்பதுபோலும்.

அரசன்:-அடா! போ. விஷயம் என்னவென்று அறிந்துவா.

வேலையாள்:-மகாராஜா உத்திரவுப்படி. [என்று வெளியேசென்று திரும்பி மறுபடியும் புகுந்து.]

மகாராஜாவாழ்க; விராடேசுவரர் வெற்றிபெறவேணும்; மகாராஜாவிடம் பிரியமானவிஷயம் தெரிவிக்கிறேன்; பசுக்களைக்கவர வந்தவர்களை வென்று பசுக்களை மீட்டாய்விட்டது; திருதராஷ்டிர புத்திரர்கள் விலகிவிட்டார்கள்.

பகவான்:—சந்தோஷம்; தாங்கள் மேன்மைதங்கி மென்மேலும் வாழ்வீர்கள்.

அரசன்:—எல்லாம் பகவானுடையமகிமையாலேயே; இப்பொழுது குமாரன் எங்கே?

வேலையாள்:—படைவீரர்களின் சூரத்தனத்தைப்பார்த்து, அவர்களுடைய வேலைத்திறத்தைப் புத்தகத்தில் பதிவுசெய்கிறார்.

அரசன்:—நல்லது! குமாரன் நல்லகாரியஞ்செய்துகொண்டிருக்கிறான்.

𑌪𑍀𑌡𑌿𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌯𑍋𑌧𑌸𑍍𑌯 𑌶𑍍𑌲𑌾𑌘𑌨𑍀𑌯𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾।
𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑍋 𑌹𑌰𑍍𑌷𑌿𑌤𑌾 𑌵𑌾𑌚𑌾 𑌨𑌾𑌶𑌯𑌤𑍍𑌯𑍇𑌵 𑌵𑍇𑌦𑌨𑌾𑌮𑍍॥

எதிரிகளுடன் போர்செய்வதில் தீரங்கொண்டு, வேலைசெய்து அடிபட்டு வேதனையை அடைந்த போர்வீரர்களுக்கு அப்பொழுதே ஸம்மானம் செய்தால், அவர்கள் வேதனை மாறிவிடும். இப்பொழுது பிருகந்நளை எங்கே?

வேலையாள்:—பிரியமான செய்தியைச் சொல்லுவதற்காக அந்தப்புரத்தில் நுழைந்திருக்கிறாள்.

அரசன்:—பிருகந்நளையை அழைத்துவருவாயாக.

வேலையாள்:—மகாராஜா உத்திரவுப்படி. [வெளியேறுதல்.]

பிருகந்நளை:—[அரங்கிற் புகுந்து அங்குமிங்கும் பார்த்து, யோசனை செய்து]

𑌗𑌾𑌣𑍍𑌡𑍀𑌵𑍇𑌨 [illegible]
[illegible]
𑌬𑌾𑌣𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌤𑍇𑌨 [illegible]
[illegible] 𑌸𑌂𑌹𑌤𑌾।
[illegible]
[illegible]
[illegible] 𑌪𑌰𑌿𑌚𑌯𑌾
[illegible]॥

நாணேற்றப்பட்டதான காண்டீவத்துடன் வெகுநாளாகப் பழக்கம்விட்டுப்போனதால், வசத்துக்குக் கொண்டுவருவதற்காகச் சற்றுச் சிரமப்படவேண்டியிருந்தது; முஷ்டியானது பாணங்களை எடுத்து எய்வதில், சரியாக எனக்கு உதவவில்லை; (நன்றாக மூடித் திறக்க வரவில்லை;) பாணங்கள் அழுத்தாமலிருப்பதற்காகத் தோலால் மூடப்பட்டதான கைத்தலத்தின் சாமர்த்தியம் சற்றுக் குறைவுபட்டது; நான் பெண்வேஷந்தரித்திருப்பதால், என் விரைவு சற்றுக்குறைவுபட்டுப் பிறகு நெடுநாள் பழகின பழக்கத்தினால், நான் எனக்குரிய இயல்பை அடைந்தேன்.

சுெ ந நவெஷெண நரொநூ ஐயெ்ய
ஓஜ்ஞாயஸொெ ந நய நாவி-க்ஷூஂ।
யாத்ரா தா தாவஹூாஉாஷி-ெநஷா
ஶீவு ஂ நிஐஹ்ரு: கஜுாஷஶ்வொணா:॥

இப்பெண்ணுருவங்கொண்டே அரசர்களுக்குமத்தியில் வெட்கத்துடன் என்னால் வில்லில் நாணேற்றி அம்புகள் தொடுக்கப்பெற்றன; நான் எதிரிகளின்படையைநோக்கிச்சென்று போர் செய்யும்படிநேர்ந்தகாலத்தில், மேலே கிளம்பின தூளியானது, (அடிபட்ட சத்துருக்களின் இரத்தப்பெருக்கால்) விரைவில் அடங்கிவிட்டது. ஓ!

ஜிதாவி ஹாஂ விஜயவெ்யாவஜுஹ்ய ராஜெஜ்ஞா
ெஐ நவாஷ்தீ ெஐ ஜயஹெ தா ஐநவஷி ஞுஹஷ-ஃ:।
ஃாஶ்ஶாஸநஂ ஸஊரஐ-டீயந்நி ஸஞிஹ்ரஹ்ய
வயா யஃஜ் ந விராடவாரஂ ஞுவிஷ்ட:॥

பசுக்களைத் திருப்பியும், அரசனுக்காக வெற்றிபெற்றும், என்மனதில் வெற்றியினால் உண்டாகும் களிப்பு வரவில்லை; ஏனெனில், நான் போர்க்களத்தில் துச்சாதனனைப்பிடித்துக் கட்டி விராடநகரத்துக்குக் கொணரவில்லையே.

பிரியத்துடன் உத்தரைகொடுத்த கலன்களைப் பூண்டு, நான் அரசரை (யுதிஷ்டிரரை)க் காண வெட்கப்படுகிறேன். ஆதலால்

விராடமன்னரைப் போய்ப் பார்க்கிறேன். [சற்று நடந்து பார்த்து] வணங்கத்தக்கவரான என் முன்னோன்,

𑌸𑌯𑍌𑌵𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌤𑌪𑍋𑌵𑌨𑍇 𑌰𑌤𑌃
𑌨𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 ।
𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌰𑌾𑌜𑍍𑌯𑍋𑌽𑌪𑍍𑌯𑌭𑌿𑌵𑌰𑍍𑌧𑌿𑌤𑌃 𑌶𑍍𑌰𑌿𑌯𑌾
𑌤𑍍𑌰𑌿𑌦𑌣𑍍𑌡𑌧𑌾𑌰𑍀 𑌨 𑌚 𑌦𑌣𑍍𑌡𑌧𑌾𑌰𑌕𑌃 ॥

யௌவனத்துடனிருந்தாலும் (வயது சென்றவரைப் போல்) தவஞ்செய்வதற்காகக் கானகத்தில் பிரியமுள்ளவரும், அரசராயிருந்தாலும் பிராம்மணர்க்குரிய நடத்தையுடையவரும், ராஜ்யத்தைத் துறந்தவராயினும் ராஜ்யலக்ஷ்மியுடன் விளங்குபவரும், (குடீசகஸந்நியாஸிகளுக்குரிய முக்) தண்டங்களுடன் இருந்தாலும் குற்றஞ்செய்தோரைத் தண்டிக்காதவரும் ஆகப் பிரகாசிக்கிறார். [நெருங்கிவந்து] பகவானே! வந்தனஞ்செய்கிறேன்.

பகவான்:—நல்லது.

பிருகந்நளை:—அரசன் வெல்க.

அரசன்:—

𑌅𑌕𑌾𑌰𑌣𑌂 𑌰𑍂𑌪𑌮𑌕𑌾𑌰𑌣𑌂 𑌕𑍁𑌲𑌂
𑌮𑌹𑌤𑍍𑌸𑍁 𑌨𑍀𑌚𑍇𑌷𑍁 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌶𑍋𑌭𑌤𑍇 ।
𑌇𑌦𑌂 𑌹𑌿 𑌰𑍂𑌪𑌂 𑌪𑌰𑌿𑌭𑍂𑌤𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂
𑌤𑌦𑍇𑌵 𑌭𑍂𑌯𑍋 𑌬𑌹𑍁𑌮𑌾𑌨𑌮𑌾𑌗𑌤𑌮𑍍 ॥

மரியாதைபெறுவதற்கு, உருவமோ, குலமோ காரணமில்லை; உயர்ந்தோர்களிடமும் தாழ்ந்தோரிடமும், அவரவர் செய்யும் தொழிலே ஒளியைக்கொடுக்கிறது. (நல்ல உருவத்துடன் இருந்தாலும் இல்லாவிட்டாலும், உயர்குலத்திற் பிறந்தவனாயினும் இழிகுலத்திற் பிறந்தோனாயினும், அவனவனுடைய வேலைத்திறத்தாலேயே, ஒருவன் மேன்மையை அடைகிறான்.) முன்பு பழிக்கப்பட்டதான இந்த உருவமே, இப்போது நன்குமதிக்கப்பெறுகிறதன்றோ?

பிருகந்நளே! களைப்படைந்தவளான உன்னையே மறுபடியும் வருத்துகிறேன்; போரைப்பற்றி விரித்துரைப்பாயாக.

பிருகந்நளை:—தலைவரே! கேட்கவேண்டும்.

அரசன்:—விஷயமோ முக்கியமானது; ஸம்ஸ்கிருதத்திலேயே சொல்வாயாக.

பிருகந்நளை—மகாராஜா கேட்கவேண்டும்.

வேலையாள்:—[புகுந்து] மகாராஜா வெற்றிபெறுக.

அரசன்:—அவஷிவஃ ஊவெதஹஷெீர
ஸூஷிஹி கெநாவஸிஷிஷூிதஃ।

இதற்குமுன் காணப்படாத களிப்பு இப்பொழுது காணப்படுகிறதே? சந்தோஷத்துக்குக் காரணம் என்ன? சொல்லுவாயாக.

[தொடரும்.]

V. S. ராமஸ்வாமிசாஸ்திரி, B.A., B.L.

உ

வெள்ளகால் மகா-ள-ள-ஸ்ரீ

ராவ் ஸாஹெப். வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள்

எண்பதாம் ஆண்டுநிறைவுவிழாக்கொண்டாட்டத்தில்

1-8-1937ல் ஸ்ரீ வானமாமலைமடம் ஆஸ்தானவித்வான்

தென்றிருப்பேரை அபிநவகாளமேகம்

ஸ்ரீ அநந்தகிருஷ்ணையங்கார்

இயற்றியெடுத்துரைத்த

# வாழ்த்துப்பா.

---

சீர்மிகு கல்வியே பார்மிசை யோங்க
அரும்பொரு ளுதவிப் பெரும்புக ழுற்றோன்
திருப்பனந் தாள்நகர் விருப்பொடு வைகும்
எம்பிராற் கடியனுந் தம்பிரான் யோகியும்
பூமகள் தனக்குத் தாமரை போன்ற
வெள்ளகால் நகரில் வள்ளலா ரென்னுங்
கொண்டைகட்டுக் கொண்டநன் முதலியர்
மரபினி லினிய பரவையின் மதியென
உதித்தாங் கிலமுற் றிதித்திடு தமிழுங்
கரைகண் டோனென விரைவினிற் கற்று
விலங்கின் னேயெனும் விலங்கைத் தறித்தோன்
பணத்தால் மேன்மைக் குணத்தால் நல்வங்
கணத்தா லுயர்கவி மணத்தால் *ஆயிரம்
முழுமதி கண்ட செழுமையாற் பெரியோன்
பலவின் கனிபோற் பலவாம் நூல்கள்

---

* நித்யாந்நதாதா தருணாக்நிஹோத்ரீ
வேதாந்தவித் சந்த்ரஸஹஸ்ரதர்ஶீ ।
மாஸோபவாஸீ ச பதிவ்ரதா ச
ஷட்ஜீவலோகே மம வந்தநீயா: ॥

என்னும் கண்ணன் அருளிச்செயலில் 'சந்த்ரஸஹஸ்ரதர்ஶீ' என்பது இங்குநோக்கத்தக்கது.

தந்திங் கிலங்குநற் சிந்தையான் மேதைச்
சுப்பிரமணியனுஞ் செப்பிசை யோனும்
அன்னவற் கெண்பதா முந்நத வயதிற்
பெருந்திரு விழாச்செய் யரும்பெரி யோரும்
முனிக்குற னென்போற் றனித்தமி ழுயர்ந்தோன்
இணங்கியே யெவரும் வணங்கிடும் பெரியோன்
இக்கழ கத்தினில் மைக்கள னென்ன
மாப்பூண் மணிகளின் நாப்பண் மணிபோல்
தலைமைவகித் திடு நிலைமையின் மிக்கோன்
பூமியோர் மெச்சுஞ் சாமிநா தப்பெயர்ச்
செந்தமிழ்ச் செல்வனும் அந்தண ரேறும்
மதித்தே யெதிலும் மதித்திறங் காட்டும்
சீமனுங் குமார சாமிநன் னுமனும்
பழக்க மிகுத்திடு வழக்கறி வாளன்
ஆவுடை யப்பனுந் தேவுடை யன்பனும்
நிதம்பர னடிதொழுஞ் சிதம்பர நாதனும்
மாண்புட னினுமிவண் காண்பவ ரெவரும்
எவ்விதச் சீருமிங் கேய்ந்தே
ஆழ்கட லுலகில் வாழ்கபல் லாண்டே.

---

## ஷையார் கம்பராமாயணசாரம் மூன்றுகாண்டப்புத்தகங்கள் அனுப்பியதற்காகப் பாடிய விருத்தம்.

---

இருகலையுங் கரைகண்டோன் பெரியவாச் சான்பிள்ளை
யெழில்வான் மீகி
அருகலைரா மாயணத்தின் சாரசுதை யளித்தனன்முன்
அதுபோ லிந்நாள்
வருகலைஞ ருவந்திடவே கம்பரிரா மாயணத்தின்
வண்பாச் சாரம்
பெருகலைவேள் ளக்காற்சுப் பிரமணிய னல்கிநனி
பேறுற்றுனே.

ஸ்ரீ அநந்தகிருஷ்ணையங்கார்.

---

என்புதல்வன்வலி தெரியாதா? ஸஹவாஸவாஸனையினல் நானும் மனவலியுடையேனதலின் நீர் சற்றும் அஞ்சாது என்னிடம் உண்மையையுரையும்.

சாகரன்:—அம்மணி! நீங்கள் முதலிற் சொல்லியபடி அரசன் சினத்துக்கு அஞ்சி நம் சந்திரன் இம்மகதநாட்டின் எல்லைகடந்து வேற்றுநாடுசெல்லநினைத்து ஓடிவிட்டான்.

யமுனை:—[கண்களில் நீர்ததும்ப] எங்குச் சென்றிருப்பான்? எங்ஙனம் இனித் திரும்பிவருவான்?

சாகரன்:—நீர் மனமஞ்சேனென்று சொல்லியதை நம்பி யான் உண்மையுரைத்தது தவருயிற்றே! நீர் இங்ஙனம் மனந்தளர்வது சரியன்று. சந்திரனைப்போல என்னைப் பிள்ளையாக நினைத்திரும். நான் உம்மைத் தாயும் தந்தையுமாகக் கொண்டாடுகிறேன். இனி என்னகத்திலேயே இரும். அவன் எங்கேபோயிருப்பானென்று யாரால் ஊகிக்கமுடியும்? வடக்கிற் சீனனும், கிழக்கிற் பரமனும், தெற்கிற் கலிங்கனும், மேற்கிற் சிந்துநதிக்கப்பாற் சைந்தவனும் காந்தாரனும், இமயத்திற் பாஞ்சாலனும் காஸ்மீரனும் பேரரசர்களாய் ஆட்சிசெய்கிறார்கள். அவர்களில் எவர்மாட்டும் நம் சந்திரன் பேரும் கீர்த்தியும் பெறற்குரியன். இவன்சென்றடைய இம்மன்னர்களில் எவர் நற்றவம்புரிந்திருக்கிறரோ?

யமுனை:—என் அருமைச் சந்திரனுடன் நகமும் சதையும் போல் இடைவிடாது பழகிவந்த உமக்கு அவன் மனதில் இம்மன்னருள் யாரிடம் மிகுந்த மதிப்பென்று தெரியாதா? இவ்விடர்ப்பாடுற்ற காலத்தில் அத்தகையோரிடந்தானே அவன் சென்றிருத்தல்கூடும்.

சாகரன்:—அங்ஙனமெண்ணின் நம் நந்தரிடத்திலேதான் அவனுக்கு அளவிறந்த மதிப்பு உண்டு. ஆயினும், அஸ்தமயகிரியிலிருந்து கிளம்பிக் கிழக்குநோக்கிப் பல அரசரைவென்று வெற்றிமாலைசூடிவரும் அலக்ஷயேந்திரனென்னும் மகாவீரனைப்பற்றி நாங்கள் அடிக்கடி சம்பாஷித்திருக்கிறேம். இவன் அவனிடந்தான் சென்றிருப்பானென்று எனக்குத் தோற்றுகின்றது. மற்றையோரிடம் இவன் வீரச்செயல்களாற் பேரடைந்துயா இது சமயமில்லை. காந்தாரம் பாரசீகம் முதலிய நாடுகளிலிருந்துவந்த ஒற்றரும் வணிகரும் அவ்வீரன்மேன்மையை மிக உயர்த்திப்பேசுகின்றனர். அவனை நேரில் பார்க்கவேண்டுமென்ற தன்னசையைச் சந்திரன்

பலமுறை என்னிடம் உரைத்திருக்கிறான்; ஆதலின் அங்கேதான் சென்றிருப்பானென்று நம்புகிறேன்.

யமுனை:—சாகரரே! நீர் கல்வியின் சாகரரே. உம்முடைய ஊகம் மிகவும் நேரானதே. பல்முறை என்னிடங்கூடச் சந்திரன் அவ்வலக்ஷயேந்திரனைப்பற்றிக் குதூகலத்தோடு பேசியிருக்கிறான். அவன் வீரச்செயல்களைச் சொல்லும்போதெல்லாம் இவன் உடல்சிலிர்த்துக் கண்கள் மலர்ந்து மீசைதுடித்துக் கைபதறித் தானே அவைகளைச் செய்பவன்போல் நடிப்பான். இவ்வளவுகாலம் இவன் அவ்வீரனைச் சேர்ந்திருப்பனே?

சாகரன்.—அவ்வீரனைச் சேர்ந்திருப்பின் சீக்கிரம் சந்திரன் நம்நாடு வருவான். அவ்வீரன் நம்மரசன்மேற் படையெடுத்து வருவதாகத் தூதர்கள் வந்து கூறிச்சென்றனரே?

யமுனை:—நம்மரசரை யெதிர்த்துப்பொர மாற்றரசரோடு சந்திரன் வருவானென்று நம்புகிறீர். அங்ஙனம் செய்வதைக்காட்டி லும் அவன் உயிர்மாய்தல் மேல். அவனை மாற்றார்படையிற் போர்க் குரிய அங்கங்களோடு காணின் அவன் என்புதல்வனென்று பாரா மல் யானே அவனைக் குத்திக் கொலைபுரிவேன். அங்ஙனம் அவன் வரவேமாட்டானென்று நீர் உறுதியாய்நம்பும்.

சாகரன்:—நீர் பெண். அரண்மனைச் செல்வத்தில் அளவிறந்த காலம் பழகி, மாறினமனத்தின் கூறறியாதீர். சந்திரனுக்குக் கல்வி கேள்விகளின்மேன்மையால், தன்னரசன்மேற் படையெடுத்தவ ரோடுசேர்ந்து பொருதல் அடாதென்று தெரியும். ஆயினும், கோபம் பாபத்துக்கஞ்சுமா? சந்திரன்கோபமோ தன்னை நந்தர் வருத்துவாரென்னும் பயத்தால் உண்டானது. அவர்க்கு அர சுரிமையுள்ளவரை இப்பயம் சந்திரனைவிட்டு மாறாது. ஆதலின் இவன் மாற்றாருடன்சேர்ந்து பொருது நம் மன்னனரசுரிமை யைக் குலைக்கத்தலைப்படுவது இயற்கையே.

யமுனை:—என்புதல்வன் எங்கிருப்பினும் ஈசன் அவனுக்கு நல்ல மதியைக்கொடுத்துப் பாதுகாப்பானாக. சாகரரே! நான் போய்வருகிறேன் நீர் சுகமாயிரும்.

சாகரன்:—அம்மா! அப்படியே.

[போதல்]

## அங்கம் - II.

### களம் - 2.

இடம்:—தக்ஷாலயத்தில் ஓர் அரண்மனை.

பாத்திரம்:—சேனாதிபதி சத்ருஜித்.

சத்ருஜித்:—[தன்னறையில் உட்கார்ந்துகொண்டு] யானா பரமசிங்கத்தின்பிள்ளை? பாரசிகரைப் பலமுறை தோற்றோடவிரட்டிப் பரதகண்டமுழுதையும் பாதுகாத்தவர்மரபில் யான் தோன்றியது உண்மைதானா? அலக்ஷ்யேந்திரனென்னும் மிலேச்சவீரன்கையில் என்னரசன் தோல்வியுறவும் யான் உயிர்வாழ்தல் என்குலத்துக்கும் வீரத்துக்கும் அழகா? ஆகா! என்ன துக்கத்துக்காளானேன்? அக்கரையில் இருந்த சேனை ஆற்றைத்தாண்டி நேரேவருமென்றெண்ணியன்றோ யான் மகரவியூகம் வகுத்தேன். அவர் அங்ஙனம் வந்திருப்பின் அவரோடு எதிர்க்காமல் மகரத்தின் வாய்வழியே அவரை உள்ளே அனுப்பிச் சங்கிலியாற் சக்கரவியூகமமைத்து அவ்வளவுவீரரையும் கொல்லாமற் சிறைபிடித் தடிமைப்படுத்தியிருப்பேன். மீறிப்பொருதோர் கூறுபட்டிறப்பர். தொகுதிகள் பலவினும் திகிரியிற் பட்டோர் தப்பமுடியுமா? அழியாவாற்றலபிமன்னியுவும் திகிரித்தொகுதியிலன்றோ திறனழிந்திறந்தனன். உறங்குங்காற் பின்புறம் போர்தொடர்ந்த இச் சண்டாளர்வெற்றி எத்தனைநாள் நிலைக்கும். கள்வரும் கொலைஞரும் போகும் கதியில் அவன் போவானென்பது பொய்யா? 'யதோ தர்ம ஸ்ததோ ஜயః' என்ற வியாஸர்வாக்கும் பொய்யாகுமா? நல்லது இருக்கட்டும். [ஒருசேவகன் தொழுது ஓர் ஓலையைக் கொடுக்க வாங்கி] இது, நம்மிறைவன் கைப்பொறியன்றோ? அவராணையை ஆற்றுதும்; இன்றெனின் இறத்தும். [ஓலையைப் பிரித்து] "பகைகடிவீர! நின் திருபம் பெற்றோம். நீறிற்பொதிந்த நிறைதணற்றுண்டை ஆறின சாம்பலென்றணுகிடுவார்போல் மாற்றார் வெற்றியின் மாழ்கிய நம்மை வலியிலரென்றெண்ணித் திறைகொடாது மறுத்த மிலேச்சமன்னரைச் சிறைபிடித்துவரவும்" [என்று படித்து] மிகுந்த சந்தோஷம். பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அவரை அடக்குதலேயன்றி அழிந்த சேனைக்கும் ஆளழைத்துவரலாம். [சேவகன் தொழுதுநிற்க.]

சத்ருஜித்:—சேவகா! என்ன?

சேவகன்:—வெற்றித்தெய்வமாகிய முருகக்கடவுளே மாணவ வடிவுபூண்டதுபோல் ஓரிளங்குமரர் சமுகத்தின் சமயத்தை நோக்கிக் காத்திருக்கிறார்.

சத்ருஜித்:— அவரை உள்ளே அழைத்துவா.

சேவகன்:—[சந்திரனை உள்ளே அழைத்துவந்து விட்டுப்போதல்.]

சந்திரன்:—[தொழுது] வெற்றிவீர! மல்கநின் வலிமை.

சத்ருஜித்:—பிள்ளாய்! நீ நீடூழி வாழ்க. நீ யார்? எங்கிருந்து எதன்பொருட்டு வந்தனை?

சந்திரன்:—ஆரியர்சிகாமணியே! உம்முடைய வயிற்றிற் பிறக்க யான் தவம்புரியாவிடினும் நீர் அன்புடன் அழைத்ததே என் பெரும்பேறாகும். மகதநாட்டின் தலைநகரான பாடலீபுரத்தில் ஓர் அரண்மனைத் தாதியின் அரும்புதல்வன் யான். அரசிளங்குமரன்புடையேனாதலின் அவருடன் வித்தைகள் பல பயின்றேன்; பாலடைநீர்போல் அவர்வழிப்பட்டேன். தங்களையும் புருஷோத்தமரையுங்கூடச் சமரில் வெல்லவல்ல வீரன் ஒருவன் உளனென்று கேள்வியுற்றேன். அவன் வலிகாணவந்தேன். என்னுடலில் உயிருள்ளவரை உம்முடன் நிழல்போல் தொடர்ந்து அவ்வீரன் வலியை எதிர்த்துக்காண்பேன்.

சத்ருஜித்:—எழுதோள்வீர! இச்சிறுபிராயத்தில் இவ்வளவு மனவெழுச்சியமைந்த உன்னைப்பெற்ற தாய்தந்தையர்செய்த புண்ணியம் யான் செய்திலேன். எங்களைவென்ற அலக்ஷ்யேந்திரனை நீ சாதாரணமாய் நினையாதே. அவனடைந்த வெற்றி அவனுக்கு முழுதும் தகும். மலர்ந்தகண்ணும், எழுந்ததோளும், பகிர்ந்து பல்லொளிபரவிய வாயும், நட்டுவைத்தன்ன நாசியும், காதும், பொட்டின்கட்டும், பொறிசிதர் மூச்சும், நீண்டகல் கவுளும், நெற்றிமுன்செறிவும் ஆண்டகையுருவே அவனுருவாகும். அவனுடலை நோக்கின் கட்டியதசையும் கயிறன நரம்புமாய்ப் பிரமனே பிரதாபமென்னும் உலையில் வீரமென்னும் இரும்பைக்காய்ச்சிப்

போரென்னும் சம்மட்டியாலடித்து உருட்டித்திரட்டி உருவங்க ளமைத்து வலிமையென்னும் சங்கிலியால் அவற்றைப் பிணைத்து ஈர்த்துக்கட்டி, அஞ்சாதநெஞ்சென்னும் உட்பொறியமைத்து இவ் வுலகில் அலையவிட்ட ஓர் உருவம்போல் தோன்றும். அவன் தலை யெடுத்துயர்ந்து தடக்கைவீசி இடக்கையின் ஈர்த்தடக்கலின் எறியகுதிரை துள்ளவும், கால்கள் அங்கவடியோடு மடிந்து பின் செல்லவும் சிவன்கைப்பட்ட மேருவைப்போற் சற்றுவளைந்து இடக் கையை வாருடன் குதிரையின் பிடரியினழுந்த இருத்தித் தன் உடல்வலியெல்லாம் வலக்கையில்திரட்டி வாள்கொடுகொல்லும் கோளினைநோக்கின் ஊழிக்காலத்துருத்திரனும் வளைந்தெரித்துண் ணும் வடவைக்கனலும் கடையுகக் காற்றும் ஓருருவாய்த்திரண்டு உலகழிதொழிலில் ஊக்கமொடு வினைசெய்வதொக்கும். அவன் கொல்லும் உயிரெலாம் கள்ளெனப்பருகித் தன்னுடல் மறந்து வர வர வலிமிகுந்து அடர்ந்தபோர்முனை யிடந்தாக்காதி இருளழித் தேகும் பரிதிக்கடவுளென இளைப்பென்பதே அறியாது மேற்செல் வன். அங்ஙனம் அவன்செல்லும்வழிப்பட்ட கரியும் பரியும் காலும் தேரும் இரியும்; திரியும்; பிரியும்; பேரும். இன்றேற் கரியும் மறியும் நெரியும் சரியும். ஆ! ஆ! அவன் வலிமையை என்னென்று சொல்வேன். போர்மிகுந்தாற்றும் வீரர்பலரை நேரெதிர்த்தறி யாச் சிறுவனாதலின் நீ அவனை மதித்தாயில்லை. ஆயினும், உன் உடற்றிறத்தை உற்றுநோக்கின் போர்முனைவெல்லும் சீரமைந்ததது தான். உந்திய வாளியின் முந்துறு மிருப்புத் தலையெனத் தான் முற் பட்டுத் தன்சேனைபுக வாள்கொண்டு வழிவிலக்கி மாற்றூர்மாட்டே கும் அலக்ஷந்திரனையும் நீ ஒருநாட் கண்டுகளிப்பாய். என்பக்கல் நீ பிரியாதிருப்பின் வெற்றித்திருவும் நம்மைவிட் டகலாதிருப்பள்.

சந்திரன்:—பெருந்தகாய்! அவ்வீரன்வலியை அநேகராற் கேள்வியுற்ற எனக்குச் சுத்தவீரரிற் சிங்கம்போல் விளங்கும் உம் வாயாற் கேட்டபின்பு அவனைப் போர்முகத்திற் காணவேண்டு மென்ற ஊக்கம் விரைவில் மேம்படுகிறது. உம்முடன் இடைவிடா திருக்கும் பெரும்பேறடைந்த எனக்கு இது தவறாது வாய்க்கும். அப்பொழுது கங்கைநாட்டின் ஊற்றமும் எம் ஆசிரியரனுக்கிரக மும் பொய்க்காது காப்பேன். இலையாயின் உயிர்நீப்பேன்.

சத்ருஜித்:—ஏற்றிளஞ்சிங்கமே! உன் மனவுறுதியை மிகவும் மெச்சுகிறேன். உன் தோள்வலியும் இங்ஙனமே மிகுந்து நீ நீடு வாழ்ந்து இப்பரதகண்டத்திற் பகையணுகாது காத்துப் பெருங் கீர்த்திபெறக்கடவை.

சந்திரன்:—[வணங்கி] வீரர்பெருமானே! தங்கள் அநுக்கிரகப் பயனிருக்க எனக்கு அக்கீர்த்தி அமைவது அரிதன்று.

சத்ருஜித்:—நல்லது; பிள்ளாய்! நீ சுத்தவீரன்தானென்று யான் நிதானிக்க நீ வந்த சமயமே தக்கசான்று. அரசனுணையிற் போர்வந்ததென்று மகிழ்ந்து யான் பூரித்துச் சந்தோஷித்திருந்த வேளையில் நீ அப்போரேயென்னத் தோன்றினை. ஆதலின் அப் போர்க்கு நீ வரல்வேண்டும்.

சந்திரன்:—எப்போராயினும் உம்மைவிட்டகலேன்.

சத்ருஜித்:—நல்லது போவோம்.

---

## அங்கம்-II.

### களம்-3.

---

இடம்:—பாடலீபுரத்தில் ஒருகுடிசை.

யமுனை:—[வாயிற்படியில் உட்கார்ந்து பாக்கு நறுக்கிக்கொண்டு] என்னருமைச்சந்திரனைக்காணுமல் யான் எவ்வளவுநாள் இருப்பது. தானிருந்துபழகிய இடத்தையெல்லாம் வெற்றிடமாக்கி, அவனைக் கண்டுகுளிரும் என் கண்கள் ஓயாது நீரைச் சொரிந் தழவிட்டு என் அருமைக்கண்மணி எங்கு சென்றனனே? கதவென அகன்ற மார்பும், திரண்டு பருத்த கழுத்தும் ஏற்றிமிலன்னதோளும் சுற்றிச் சுழன்ற கண்ணும் என் கண்ணே! உன்னை எப்பொழுது காணப் போகிறேன். [அழுதல்.]

சுலோசனை:—[வந்து] அம்மா! என் அழுகிறீர்கள்? உங்கள் குமாரரைப்பற்றிச் சொல்லக்கூடாதென்று என் தமயனர்

தீர்மானமாயிருந்தார். நாங்கள் ஏதோ உரையாடிக்கொண்டிருந்தசமயத்தில் நீங்கள் வந்தீர்கள். அதுவும் நல்ல சமயமாயிருந்து நீங்கள் விஷயத்தை முழுதும் தெரிந்துகொள்ள நேர்ந்தது. அத்தகைய மைந்தரைப்பெற்ற நீர் அவர் பிரிவாற்ருமையான் வருந்துவது இயல்பே. ஆயினும், அவர் புத்தியையும் வீரத்தையும் நோக்கின் நீர் வருந்தவேவேண்டாம்.

யமுனே:—'பெற்றவருக்குத் தெரியும் பிள்ளையருமை'. நீ சிறு பெண். ஒரேபிள்ளையாக நான் வளர்த்துவந்த சந்திரனைக்காட்டிலும், என் அன்புக்கடைபொருள் வேறென்றுண்டோ? அவனில்லாத வீடு காடாகும். அவனைக் காணுது வாழ்தலிற் சாதலே மேல்.

சுலோசனை:—உங்கள் முதிர்ந்தவபதில் லோகாநுபவத்தால் மனத்தைத் தேற்றிக்கொள்ளாமல் நீங்கள் மனங்களரக்கூடாது. அறுபதினுயிரவருஷம் தவம்புரிந்து புத்திரகாமேஷ்டிசெய்து பெற்ற பிள்ளையைக் காட்டகத்தே விட்டுக் கோசலை பதினன்குவருஷம் காலங்கழிக்கவில்லையா? அங்ஙனமே நீங்களும் பொறுமையுடனிருத்தல் நன்று. வீணே துக்கிப்பதாற் பயனில்லை. பெருக்காற்றிடை நாணல்போல விதிவழிப்படுங்கால் மனவமைதியோடும் உறுதியோடும் தாழ்ந்துபோதலே மேலான அறிவாளிகளின் இயல்பு. விதியின்செயலை வெல்ல யாராலியலும்? ஆதலின் நீர் மனதைத்தேற்றிக்கொண்டு உயிர்வாழ்ந்துவருவீராயின் உம்முடையகுமாரரை நல்லநிலைமையில் விரைவிற் கண்டு களிப்பீர்.

யமுனே:—குழந்தாய்! உன்சிறுவயதுக்குநீ அறிவுமிகுந்தவளே. ஆயினும், சிலகாலமாய் நீ உடல்வாடி வருந்துதலேனே? மேலும், ஒருசமயம் உன்னை யான்கண்ட * கோலத்தின்பொருளை அறியவிரும்புகிறேன்.

சுலோசனை:—அம்மா! என் உடலிளைத்ததிருக்கட்டும். உங்களுக்கு என்மேலுள்ள அன்பினுல் யான் தினந்தோறும் பருக்கவேண்டுமென்று நினைத்துக்கொள்ளுகிறீர்கள். அப்படிப் பருக்காதது இளைத்திருத்தல்போல் தோன்றுகிறது. மற்றைப்படி என்னை என்னகோலத்திற் கண்டீர்கள்,

யமுனை:—ஒன்றுமில்லை; அன்று சாகரன்வாயில்வெளிப்பட்டு என்மனத்தை ஊறுபடுத்தின உண்மை உன்னையும் மூர்ச்சித்து விழச்செய்வானேன்?

சுலோசனை:—[வெட்கி இடக்கையாற் கன்னத்தைப் பொத்தி மறைத்து] அது எனக்குத் தெரிந்த விஷயந்தானே! அது என்னை ஒன்றும் செய்திருக்க நியாயமில்லையே.

யமுனை:—நீ சொல்வது மிகவும் சரிதான். ஆனால் இப்பொழுது வெட்கித் திரும்பி மறுமொழிகூறியதற்கு உன்னால் நியாயம் சொல்லமுடியுமா?

சுலோசனை:—[வெட்கித் தலைகுனிந்து] ஒன்றுமில்லை. அன்று நான் மனந்தடுமாறினது, நீங்கள் வருவதை அறியாது என் அண்ணன் சொன்னது உங்கள்காதில் விழுந்துவிட்டதே; நீங்கள் மிகவும் வருந்துவீர்களே! என்கிற மனவருத்தத்தினாலேயொழிய வேறில்லை.

யமுனை:—ஆமாம். அதைச்சொல்லும்பொழுது வெட்கித் தலைகுனிந்துகொண்டு சொல்வானேன்.

சுலோசனை:—முதிர்ந்த வயதுடைய நீங்கள் சிறுமியாகிய என்னைப் பரீக்ஷிக்கலாமா?

யமுனை:—யான் மகவிழந்துறும் துன்பத்தினும் மேலான துன்பத்தை நீ மனமிழந்துறுகின்றதனால் நம்மிருவர் துயரும் தீர்க்கமுயலவேண்டும்.

சுலோசனை:—என் உயிர்த்தோழர்பொருட்டு நீர் என்னசெய்யச் சொல்லினும் யான் பின்வாங்கேன்.

யமுனை:—[சுலோசனையைத் தழுவிக்கொண்டு] கற்பகக்கொடியே! யான் உலகினிற் பற்றின்றிப் பரலோகசாதனத்தைத் தேடும்பொருட்டுக் கங்கைக்கரைவழியே மேற்குநோக்கி யாத்திரைசெய்து காலங்கழிக்க நிச்சயித்தேன். இனிச் சந்திரன்வந்து என்னைத் தேடின் நீயே அவனுக்குத் தாயென அன்புவாய்ந்திருக்கக்கடவை.

2086 கொம்மை வெம்முலைக் கோதையர் கோமள மடவார்
தம்மை யூசல்வைத் தாட்டலுங் [1]தழைந்தவார் காதிற்
செம்மை மாமணிக் குண்டல மறுகுமத் திறத்தான்
மும்மை யூசலின் முறைவளங் காட்டுவ முழுதும். (ருக)

2087 மைக்கண் மங்கைய ரூசலா டிடுந்தொறு மணிசேர்
மிக்க காதணி மஞ்சிகை தணந்துபைம் பூக
முக்க பல்பழுக் காய்களி னுடன்விரா யொளிரத்
தொக்க சேடியர் பகுத்தறி வரியராய்ச் சுழல்வார். (ருஉ)

வேறு.

2088 வரந்த வாமண் வளம்பெறத் தாந்தம
வுரந்தவாதற லுக்கநன் குள்ளுறீப்
பரந்த வானம் பருகெனப் பல்பழஞ்
சுரந்து பொங்கரி னீட்டுவ சோலையே. (ருங)

2089 வார்பொ ழிற்பல வின்கனி மண்பக
வேர்மு தற்கட் பழுத்து வெடிப்பன
நீர்தி ரைத்தெறி நீள்கடற் றூனைசூழ்
பார்ம கட்கவி பாரித்தன் மானுமே. (ருச)

2090 உடுவின் மண்டலத் தூடுமு பொங்கர்மாப்
படுப ழுங்கைப் பரீயிள மந்தியுங்
கடுவ னுங்களிப் புற்றெதிர் காய்ந்தெறிந்
திடுவ தேம்பெ யிருலை யிழிக்குமே. (ருரு)

2091 வீக்கு கச்சிற விம்முறு கொங்கையார்
காக்க ணின்று கயற்கணிற் கண்ணுறீஇ
நோக்க மெல்ல நகைத்திட நொய்தின்மாப்
பூக்கப் பூக்கும் புதுவெண் டளவமே. (ருசு)

2092 வள்ளை வாட்டிய வார்குழை வாட்கணார்
கொள்ளை வண்டிமிர் காவிற் குறுகலும்
வெள்ளை யன்னங்கள் மென்னடை கற்றிடக்
கிள்ளை மென்மொழி கற்குங் கிழமைத்தே. (ருஎ)

---

[பி-ம்.] [1] தழைந்தவர். சா.

2093 குதிகொ ளுங்கவி கோடுற வார்பொழி
லுதிர்ப ழுங்க ளுலப்பில கொண்டுராய்
நதிக ளும்பல நன்னதி யென்பவாய்ப்
பதிகள் யாவும் பழம்பதி யாமரோ. (ருஅ)

2094 வடிகொள் கண்ணியர் வண்டிரை வாவிவாய்த்
தொடிகொ ளங்கையிற் றூய்மலர் கொய்தெழாக்
கடிகொள் சந்தனக் காவயி னின்றபூங்
கொடியை யுந்தம் மினமென்று கூவுவார். (ருகூ)

2095 புட்டு வன்றிரை பொய்கைமென் போதுசோர்
கட்டு வன்றுண் களிப்புற் றுகள்வரான்
முட்டு வன்ற முடப்பல வின்கனி
யுட்டு வன்ற சுளையை யுதிர்க்குமே. (சூ0)

வேறு.

2096 பள்ளநீர் குடைந்து நிற்கும் பாவைமார் வதன ராசி
கள்ளுறுக் கமல மென்றே காவில்வண் டினஞ்சென் றெய்தா
வள்ளைவார் குழையிற் றூவு மதாரிக் கருங்கண் வண்டென்
றுள்ளியே பிறர்தம் மிச்சி லுசிதமன் றென்று மீளும். (சூக)

2097 கொழுங்கயற் [1]கருங்க ணூர்நீர் குடைந்துவெள் ளணிகொள் கோலத்
தொழுங்கொருபுடையுமன்னவொழுங்கொருபுடையுமேவச்
செழுங்கயத் திரைதேர்ந்தேகுஞ்சேவலோ திமங்கண் மைய
லெழுந்திரு வயினும் பேட்டி னீட்டமென் றெய்து மாதோ.

2098 துறுமலர்க் கருமென் கூந்தற் றோகையர் முகத்து மைந்தர்
கறுவுகொண் மனத்தி னேடுங் கலாமுயல் குநர்போற் பொய்கை
யுறுமலர்த் திகிரிவே லொன்றேச்சுபு மறியென் றிண்டை
நறுமலர் கூம்ப வாம்ப னணிபிணி யவிழ்க்கு மன்றே. (சூரு)

2099 *முருகவி ழளகக் காட்டை முன்னிடா வல்குற்றேரும்
பருமணி வடத்திற் சேர்த்த படாமுலைக் களிறு முந்திப்
புருவவிற் குனித்து நாட்டப் பொருகணை யுடக்கி மைந்தர்
செருவிழக் தோட மார்பிற் செஞ்செவே செலுத்து வாரே.

[பி-ம்.] [1] கருங்கண் ணூர்நீர். சா.

வேறு.

2100 கற்றைவார் குழலியர்பூம் பொய்கைபடிந்
தெழமுலைமேற் கவிழ்த்த செவ்விச்
சொற்றவாய் மணங்கமழ்வெண் டளக்கலவை
கலந்திழிந்த துறைநீர் மூழ்கு
மற்றையா டவர்புயத்தப் பரிமளநின்
றெதிர்வரவே மறித்தோர் வாசம்
பெற்றவா றெவனெனவங் கவர்புணர்மங்
கையளூடும் பீடிற்றோர்பால். (சரு)

2101 தற்கொழுநர் பொருள்வயினுந் தெம்முனையும்
படர்போழ்திற் றவரொன் றில்லா
திற்படர்து மெனக்குறித்த பருவமுறு
வந்திலரென் றெண்ணி யெண்ணிக்
கற்றைமலர்க் குழலியர்தாஞ் சுழிக்கணக்கெண்
ணுவதுமிளங் கன்னி மார்கள்
சிற்றிலிழைப் பதுங்கழங்கா டுவதும்வரி
வளையுயிர்த்த தெண்முத் தன்றே. (சுசு)

வேறு.

2102 போதுதான் கொய்தும் பொய்கைப் புதுப்புனல் குடைந்தும் வாச
மேதகு கருனை யுண்டி விருந்தொடு மிசைந்துஞ் செய்ய
தாதுலா மாலை சூடித் தலைவரோ டுடிக் கூடிக்
காதல்கூர் மடவார் காலங் களிப்பொடு கழிப்பரன் றே. (சுஎ)

2103 சிலதரைத் தினமுங் கூஉய்த்தண் செறுவினுக்கமைந்த யாவு
நலனுற வமைத்துக் காலை நன்பகல் யாம மூன்றும்
புலர்வா யின்சொற் கேட்டும் போனகம் விருந்தோ டுண்டுங்
கலவியிற் களித்துங் காலங் காளைமார் கழிப்பர் மாதோ. ()

2104 நறநனி மலர் விராய நளிபுனற் பண்ணை சூழ்ந்த
புறநகர் மருத வைப்பின் பொற்பொரு வழியிற் செப்பி
யறனல னுருக்கொண் டன்ன வகநகர்க் கமைந்த செல்வத்
திறமினி யுரைக்க லுற்றே னென்னையான் சிரிக்கு மாறே.()

வேறு.

2105 துப்புரவிற் கமிர்தினும்வான் சுவைதருமுத்
தமவிரசைத் தொன்னீர்க் கிப்பான்
மெய்ப்புவனத் துதித்தவிழு மியபொருடா
மவணிருந்து மேய்வ தாகு
மப்புலத்துற் றுளவரிய விழுப்பொருளா
யிடையமைந்தோர்க் கமைவ தல்லா
லெப்புலத்தெய் தினுமொருவர்க் கெய்தரிதா
மெனவுலக மிசைப்ப மாதோ. (எ௦)

வேறு.

2106 *செம்பினை யுருக்கி வாக்கித் திண்ணிதி னகழி தூர்த்திட்
டும்பரின் முதலே வெண்பொ னுவானம தமைத்த [1]பின்னர்ப்
பைம்பொனற் செகதி கண்டம் பட்டிகை வகுத்திட் டோர்சார்
இம்பர்நின் [2]றேற்ற யாளிச் சுருட்படி யியற்றி மன்னோ. (எக)

2107 *பாங்கர்வே திகைக்குத் தானம் பகுத்தரங் கினுக்கு நாப்ப
ணோங்குபொற் சுவர்நி றீஇவித் துருமசா ளரஞ்செய் தோவா
வீங்கிரு டணிக்குஞ் செய்ய விழுமணி யதனுன் மேல்வாய்த்
தாங்குமுத் திரம்வைத் துள்வச் சிரத்துலாந் தகவின் வைத்தே. ()

2108 *பச்சைநன் மணியை யீர்ந்த பலகைமேற் பரப்பி நீலத்
தச்சுறு கொடுங்கை மூட்டி யதன்புழை யகத்த வாக
வச்சிர வளைக ளோடி மணிசெய்வே திகைமாண் டுணைத்
துச்சிமேற் பலகை சிற்றுத் திரத்தினோ டொன்றச் சேர்த்தே. ()

2109 *வெள்ளிவெண் பலகை நான்கு விரல்விய னீப்பின் றூக
வள்ளுற நிரைத்து வண்பொன் னுணிக ளழுத்திக் கையா
லள்ளுபு திரளு மொண்பொன் னடரதன் ஞாங்கர் மேய்ந்து
தெள்ளிதி னெழதாகத் திகழ்நிலம் புணர்த்து மாதோ. ()

2110 *வாரிநீ ணிலையு மேல்கீழ் மரீஇயநோன் படியுந் தாளுங்
கூர்கபா டமுமொன் றூகக் கொளீஇயமாண் மணிக டம்மாற்
சீர்கெழு தசும்பு சூட்டுஞ் சிமயமோ டுயர்ந்து வானு
ளார்தமக் கமைந்த தச்சர்க் கணங்குசெய் வன[3]பன் மாடம்.

[பி-ம்.] [1] பின்றை; [2] றேற; [3] பொன் மாடம். மா.

வேறு.

2111 சித்தி ரம்பெற நிலஞ்செய்வெண் பளிங்கினைச் செழும்பொற்
பித்தி கைச்சுடர் புருடரா கஞ்செயப் பிணிக்கு
முத்த மாலிகை முழுநிலா முறைமுறை கதுவச்
சுத்த மேதகு சிவகன் மணியெனத் துளங்கும். (எசு)

2112 வெம்மை வச்சிரத் துளைவளை வெண்பொனென் பலகை
செம்மை நீனிற மணிக்கொடுங் கைகளிருள் செய்யக்
கொம்மை கம்பொடு குட்டமென் றுறுப்புறக் குயின்ற
மும்மை யுத்திர முழுமணி வெயில்செயு முழுதும். (எஎ)

2113 அங்கண் மாநிலத் தருவியங் கிரிகளைச் சேய்த்தாங்
கங்கை யாதிய நதிகளைக் கடல்களைக் காண்பான்
கொங்குதோய்குழற்குலத்தையர்க்கிழைத்தகுன் றெனலா
மங்குல் வாய்கிழித் தெழுதம னியமணி மாடம். (எஅ)

வேறு.

2114 *மாடகு ளிகைக்கொழும்பொற் றகட்டமைத்த
முழுமணிவால் வயிர நீலம்
பாடல்சால் பசுமணி[1]திண் ணிலைப்புருட
ராகமிவை பத்தி வாய்ந்து
கோடலால் வளர்தருசெங் கேழ்[2]புனைமாண்
செக்கரொடுங் குறைவொன் றில்லா
வாடகா சலக்குடுமி [3]வளைத்திடுமிந்
திரதனுவொத் தவிர்வ தொன்றே. (எசு)

2115 அடர்கொழும்பொற் றகடுபொதிந் தருமணியின்
றொகை குயிற்றி யமைத்த மாடச்
சுடர்விசும்பிற் பரந்துமுழு மதியமிள
வெயிற்பிழம்பின் சோதி காட்ட
விடர்புனைகா தலர்த்தணந்தோ ரன்றி மணந்
தவர்தாமும் வியந்தெஞ் ஞான்றும்
படரிரவிற் பனிமதிபா ணித்தல்வழீஇப்
பூணித்த பகலென் பாரே. (அ0)

---

[பி-ம்.] [1] பொன்னிறப்புருட; [2] இளர்மாண்; [3] வளைத்தெழுமிக். மா.

2116 *காருலா வியகொழும்பொன் மணிமாட
வெயிற்பிழம்பு கதுவ நாளு
மேருமால் வரையெனவே பொலிந்தபனி
வரைக்குலங்கள் வேலை நீர்சூழ்
பாருமா டகநகரிற் சிறந்தவிறன்
மதன்மகுட பந்தி மானும்
வாருலா முகிழ்முலைமங் கையருமலர்
மகள்குழுவின் வாழ்வார் மன்னோ. (அக)

வேறு.

2117 *பாய்கதிர்க் கடவுளும் பனிவெண் டிங்களுஞ்
சேயிகந் திரிதருஞ் செம்பொன் மாளிகைத்
தூயநுண் டுகிற்கொடி துவன்றித் தோன்றலாற்
காயமம் பரமெனும் வாய்மை காட்டுமே. (அஉ)

2118 வானுலாங் கதியினர் மாசில் யாக்கையைப்
பானுவா னவன்சுடும் பையு ணீக்குவான்
மேனிலாய் நிரந்தரம் வீசு மாறதாங்
கூனிலாக் கொழுந்துழுங் கொடிக ளாடலே. (அங)

2119 தட்டுரு நிமிர்ந்தபொற் சயில மென்னவான்
முட்டுமா ளிகைநெடு முகட்டின் மேதகக்
கட்டுபூங் கொடிகளின் கணஞ்சென் றுற்றியே
வட்டமா மதிக்கிடை மறுவுண் டாயதே. (அச)

வேறு.

2120 இளங்கதிர்மா மணிபசும்பொன் னுடை கோடித்
திறைமணந்து தாழ்வாரத் தெழின்மை யாடி
வளம்பயின்ற காவியங்கண் மாதர் மேவி
மதித்தகவிக் குலம்புணர்க்கும் வண்ணம் வாய்ந்து
துளங்குமுழு மதியுடனுண் கலைக டோய்ந்து
சுடர்விடங்கத் தழியாத சோதி வானோர்
விளங்குமுயர் பதியுறலா லொண்பொன் மாடம்
வியன்கலைவா னரைப்பொருவு மேன்மைத் தாமே. ()

வேறு.

2121 சோதி பொங்கிய பதங்கன்வான் வலம்வருஞ் சுவண
வோதி பற்பல படிவமுற் றுளதென வுறையுங்
கோதி லாமணிக் கொழும்பொன்மா ளிகைவளங் கூறி
யாதி மாநகர்க் கணியதா மாவணம் புகல்கேன். (அசு)

2122 ஆதி வேதியர் வேதவாழ் வுறுமிட மதனைப்
போதி மாதவர் வடமொழி யினிற்புடை பெயர்நூ
லோதி மும்மைய தத்துவ முணர்ந்துளார் சமய
வாதி வாய்மத மடக்குமண் டபம்வரம் பிலவே. (அஎ)

2123 நுண்ணி தாயவண் டமிழ்வகை நுவல்பொன்மண் டபங்கள்
பண்ணை யாழ்நரம் பினிலெழீப் பயில்பொன்மண் டபங்கள்
கண்ணு ளார்திரு நடனவில் கவின்பொன்மண் டபங்கள்
எண்ணில் கோடிய விருமருங் கினுமிசைந் துளவே. (அஅ)

2124 குலவும் விண்மிசைக் கொச்சையா தியினவக் கோளுஞ்
சுலவு செய்கையைச் சுராசுரர் குருவினிற் றுணிவா
னுலகி னிற்றிரி விதப்படு சோதிட முணர்ந்து
மலகு நூலுணர் பவரிட மலகிறந் தனவே. (அகூ)

2125 வாக டம்பயில் பிடகர்வாழ் வுறுமிட மணிகள்
வேக டம்புனை குநரிடங் கன்றுணு மிகுந்த
வாக டம்பெய்தெள் ளமுதினை யாதுலர் மழவுக்
கீக டன்புரி குநரிட மெண்ணில்கோ டியவே. (கூ0)

2126 வாட்ட டங்கண்மங் கையர்களா ரமுதவான் சுவையைக்
காட்டு முக்கனி பாலயி னியினெடுங் கலந்தே
வேட்ட வாதுல ருறுபசிக் கெதிரெதிர் வினவி
யூட்டி டங்களு முரைத்திடி னுலப்பில்கோ டியவே. (கூக)

2127 அரங்கு பொற்பல கையினமைத் தருமணி களிற்றேர்
குரங்கொள் கொய்யுளை களிறுகா லாளுடன் கொடுசா
துரங்க மாதிய குழுவொடு மாடவர் துவன்றிக்
கரங்க ளாலெடுத் தியற்றுமன் றமுங்கணக் கிலவே. (கூஉ)

2128 பொருவி லாடவர் வீக்கிய பொலன்கழ லரவம்
பருவ மங்கையர் சிறடிப் பரிபுர வரவ
மருவு மங்கல மணமுழா வரவமா டகயாழ்
பெருகு மேழிசை யரவமீ ரரவத்திற் பெருகும். (கூந.)

2129 மின்னில் வல்விரை யிவுளியிற் கரிணியில் வெயில்கூர்
பொன்னி னன்சிவி கையின்மணித் தேரினிற் பொலிவான்
முன்னு மாடவர் திழனியின் முறைமுறை துவன்றி
மன்னர் பாசறைத் தலமது பொருவுமம் மறுகே. (கூச)

2130 கறைகொள் வேல்விழிக் கன்னியர் கவிழ்த்தபொற் கலனு
நறைகொண் மாலிகை யாடவர் கவிழ்த்தநன் மணியு
நிறைய வைகலுங் கொள்ளுந ரின்றிநே ரலர்தந்
திறைகொண் மன்னவர் நிதியறை பொருவுமத் தெருவே.()

2131 மன்னு மாளிகை வாயிலின் வயின்வயின் வழாது
பொன்னி னற்குரு மணியினுற் குயின்றெளி புணர்த்த
கன்னி வாழையு நாகிளங் கமுகுநன் கரும்பு
மின்னு தோரண நிரையொடும் விளங்குமவ் வீதி. (கூரு)

2132 புறம்ப யின்றவைம் புலன்வழி பொறிபுகாப் புலன்றேய்ந்
தறம்ப யின்றருணிலைவிராய்ச் சித்தசித் தறிந்தே
திறம்ப லின்றியீ சனையுணர் பவர்நுதற் றிருமண்
ணிறம்ப யின்றுவா னிலவெழு முழுதுமந் நியமம். (கூஎ)

2133 வீவி லாடவர் வாகுவின் வலயங்கண் மிடைந்தே
நீவி யொன்றொடொன் றராவுறு நிலையவாய் நியதி
தூவு பொற்றுகள் முழுமணித் துகள்விரிச் சுரும்புண்
பூவி னுண்டுக ளொடுவிராய்க்குவைகுலாய்ப் பொலியும். ()

2134 முழுவ லித்திரண் மல்லர்க ளென்றுளார் முகநேர்
பொழுதி னக்கணத் தொட்டியுங் கதுமெனப் புடைத்து
மெழுவெ னத்திரள் கரங் [1]கவட் டுறத்திவின் மிசையேற்
றுழுப டைக்கலத் தோடலிற் சாடுவ வுளவே. (கூகூ)

[பி-ம்.] 1 கவுட்டுறத்தி. ச.

2135 புறங்கொ டாத்தக ரொடுதகர் வாரணம் புலவுண்
ணிறங்கொ டாரைவள் ளயிற்படை யாப்புறீஇ நெருக்கி
மறங்கொ டார்க்குநர் புன்மையை மன்னர்தம் மேவற்
றிறங்கொ டானையிற் றடுக்குநர் திரள்களைத் திசையும். ()

வேறு.

2136 பொதுவர்தம் வயினுந் தோற்றம் புரிந்தகோப் புணரிநீத்துக்
கதுமெனத் தரங்க மோதுங் கருங்கடற் புவியின் மீட்டு
மதுமலர்த் திருவுந் தானும் வரம்பிலாப் படிவம் பூண்டு
னொதுமல ரெனவாழ் மாதர் மழவர்சீர் நுவல வுற்றேன். ()

2137 திவவுத்தீச் தொடையாழ் மென்சொற் சேயரிக் கருங்கண் மின்னார்
குவவுத்தோட் கொழுநர்க் கன்புகுறிக்கொள்கை குணித்தறேற்றேங்
கவவுக்கை கலவி னைவின் கனவிலு நெகிழிற் செவ்வி
தவவுக்க விழிநீர் வாரத் தளிர்த்தெழு பசலை தாழ்வார். ()

வேறு.

2138 உணர்த்துமுறை யினிலுணர்த்தி யிலவிதழ்த்தெள்
ளமுதருந்த வொருபான் மெல்ல
வணைத்தகர நெகிழ்த்தவிழ்ந்த குழற்படலத்
தளியகற்ற வகன்ற போழ்துந்
துணைப்புளக முலைவருடுங் கரநெகிழ்ந்த
கலையகற்றத் துறந்த போதுங்
கணப்பொழுதா யினுமதனைக் கணக்கிறந்த
வூழியெனக் கருது வாரே. (௧௦௩)

2139 பொருள்வயினும் வினைவயினும் பிரிவெனவே
பிரிவனவும் புகல்வ தென்னே
வொருவயின்வை கியபொழுதுங் கண்ணொடுகண்
ணிணைநோக்கு முளமும் வேறா
யிருவயினெய் தினுமுயிர்ப்புற் றுளம்வெதும்பி
நீள்பிரிவென் றென்னே யென்னே
தருபிரிவிங் கிவற்றினில்வே றெவனெனவந்
துறுபசலைத் தளத்தி னாழ்வார். (௧௦௪)

வேறு.

2140 வேலையாய் [1]மிளிருண் கண்ணார்
விழுநிதிக் கிறைவர் சேய்த்தாங்
காலையா யிராநா ளாய
கங்குனீ கலத்தற் காலை
மாலையா யாம மாய்வை
குறுவெனக் குறுகி வாட்டற்
பாலையா யினைநிற் கென்னே
பழம்பகை யெம்மொ டென்பார். (கoரு)

2141 இலவிதழ்த் தளிநண் டேற
விருவயி னருந்தி யீறில்
கலவியுட் களிக்குங் காலைக்
கதிர்வரக் [2]கஞலுங் கங்குற்
செலவியற் றியவாய்ப் புள்ளைச்
சிறிதுநிற் கின்ப மென்றூற்
புலவிசால் புறநோ னைமை
புரிதலெம் வயினோ வென்பார். (கoசு)

2142 அன்பினன் மகன்றி லன்னா
ராகநெக் குருகு நைவாற்
கொன்குலா வெகின மன்னர்
கூறழிந் தொன்று மெய்யாற்
பொன்குலாஞ் சடிலத் தேவும்
பொருப்புயிர்த் தவளும் போல்வார்
முன்பின்வா ராத காம
முடிவினு லாக ரொப்பார். (கoஎ)

2143 விதமுறாந் துனியி னீடும்
வேலையிற் கொழுந ரொண்மைப்
பதமழித் தெழுந்த காமப்
பசியினுக் கினிய நீரால்

[பி-ம்.] [1] மிளிருக். சா. [2] கனலுங். சா.

வதனகோ ரத்தின் மாசில்
வாணிலா மூரல் காட்டி
யதரதீங் கனியும் வாணி
யமுதமு மளாவி யீவார். (க0அ)

2144 ஊடலுங் கூட லாய
வுவகைய ருவர்ப்பொன் றில்லாக்
கூடலிற் காழில் காமக்
கொழுங்கனி விழுங்கு மாற்றல்
பாடல்சார்ந் தறிந்து மிக்கோர்
பனுவல்செய் குறிப்பிற் கன்றே
யாடல்வே ளனங்க னுய
வருமறை தெரியின் மன்னே. (க0௯)

2145 *கதிர்முலைக் குவடுக் திண்டோட்
சயிலமுங் கலவி முந்நீ
ரெதிர்கொள நிறீஇமத் தாக
விவறலாந் தாம்பு பூட்டி
முதிர்பொறிப் புலவர் மாண்பின்
முறைமுறை சுழற்று மாற்றாற்
சதிர்[1]கொளப் பிறந்த வின்பத்
தனி[2]யமு தருந்து நீரார். (கக0)

2146 அளியரு திழுதொத் தாக
நெகநெகா வளவி லாத
களியருக் காழில் காமக்
கனியினை விழுங்கி நானத்
தொளியரு மாதர் சொற்கச்
சுவடுறு துயிலி னென்றூ
வொளியருத் திகிரி யான்ற
வும்பர்வீட் டின்ப மென்பார். (ககக)

[பி-ம்.] [1] பெறப்; [2] யமிர். மா

2147 மின்றிரண் டனைய பொற்பூண்
மிளிர்முலை சுமக்க லாற்றுத்
தன்றெனு மருங்கு னல்லார்
தமதம கொழுநர் மார்பத்
தொன்றிய துயிலின் மேய
வுறுசுவை பொருவு மொன்றே
வன்றிறற் குலிச பாணி
மாழைநாட் டின்ப மென்பார். (ககஉ)

2148 துப்புர வளிக்கு மின்னார்
துனித்தணை துறந்து ளார்க்கந்
தப்புரத் திருந்த பொற்கூட்
டளியபைங் கிளியைக் கூவிக்
கப்புரத் துகள்பெய் நூறு
கமழ்சுருட் கறித்த பாதி
யொப்புர வொடுமுய்த் தேவ
வூடறீர்ந் துருகு மன்றே. (ககங)

2149 கொவ்வைவாய் மகளி ரேந்துங்
கொழும்பொன்வள் ளத்துட் டீம்பால்
செவ்வையிற் கவிழ்ந்து மாந்துஞ்
சிறுகிளி நிழலை நோக்கி
யெவ்வயி னுள்ளாய் நீயிங்
கெவ்வழி புகுந்தாய் நிற்கென்
னவ்வையா ரமுத மென்னை
யருந்தல்யா தென்னு மன்னே. (ககச)

2150 வெம்முலை சுரந்த தீம்பால்
விழுத்தகை மழவு ணுமுன்
கைம்மிசைக் கிளிக்குங் காழில்
கனியிருந் தருத்துங் காலை
யெம்மனை யெமக்கொன் றீயா
திருத்தியென் பவுநைந் தோர்பாற்
பொம்மல்வெம் முலைக்கண் சோர்பால்
பூவைக்கு மளிக்கு மன்றே. (ககரு)

2151 நறவுபெய் தினிய தீம்பா
னவ்விரோக் கியர்கண் மாடப்
புறவினுக் களிப்ப முன்றிற்
றவழ்சிறுர் பொன்னின் றாணங்
குறவுகொண் டெழுந்து பொற்கூ
டொருகையாற் பற்றி நின்றப்
பறவையோ டமிர்தெஞ் ஞான்றும்
பகுத்துண்ணும் பண்பிற் ருேர்பால். (கக௬)

2152 பாவைமார் புடைத்த முத்தின்
பந்தர மியத்தி னும்பர்ப்
பூவைமார் தடுத்து மீட்டும்
புடைப்பவிண் புகுத லோடுங்
கோவைவாய்த் தரள மூரற்
கோங்கரும் புறழ்மென் கொங்கை
மாவைவாட் டியகட் டான
மடந்தையர் புடைப்ப ரன்றே. (ககஎ)

2153 புட்டகங் கமழ வூட்டும்
பூழில்வெம் புகையு மாத
ரட்டலி னுலேப்பெய் சாந்த
விந்தன வரியு நாளும்
விட்புகக் கமழ்ந்த கொண்மூ
மேய்தலிற் சகரர் மேனுட்
டொட்டதெண் டிரைநீர் தானுந்
தூமமே கமழு மன்றே. (கக௮)

வேறு.

2154 *வண்டுளர்முண் டகக்கொழும்பொற் றுணரொன்றே
பங்கமுற வளர்ந்த தெல்லாந்
தண்டமைழவா னகடுரிஞ்சுஞ் சண்பகமே
யளிதுறந்த சால்பிற் றன்ருல்

வெண்டரளப் பொறையுயிர்க்கும் வலம்புரியே
[1]கோடுவது மேன்மை மாதர்
மொண்டலேவார் குளிர்புனலே கம்பலேயுட்
கொண்டதுவு மொழியின் மன்னே. (கககூ)

2155 *கடம்புணர்ந்த தளிக்கணம்பொங் கரினிழைத்த
தேக்கெறிதேங் கமழ்செந் தேனே
திடம்புணர்ந்த கெழுதகையா டவர்கடவுஞ்
சிந்துரத்தின் றிரளொன்[2]றென்னே
மடம்புணர்ந்தா ரியற்கொழுந ருளந்தவழு
மடந்தையரே மறித்து நாடி
னடம்புணர்ந்த துகிற்கொடித்திண் டேர்மறுகுந்
திருமறுகே நவிலின் [3]மாதோ. (கஉ0)

வேறு.

2156 பூந்தண் கமல மலர்மகட்கும்
புணரி வளைத்த புவிமகட்குங்
காந்தன் றனைப்புத் தேளிர்தொழுங்
கருணு கரனைக் கழிகவின்வே
தாந்தன் றனையெவ் வுயிர்க்குமுயி
ராவான் றனையஞ் சலித்தருள்சேர்
தாந்தன் றனக்கும் பரமபதந்
தருமா னகரின் றிறமிவையால். (கஉக)

பத்தொன்பதாவது

மாடத்திருக்குருகூர்ச்சருக்கம் முற்றும்.

---

[பி-ம்] [1] கோடியதும் விழவின் மாதர். மா. [2] றுண்டான். மா. [3] மன்னே. மா.

## உ௦. திருமுடியடைவுச்சருக்கம்.

2157 முளைத்தெழுபுற் குலம்யாவை யும்யாரு
நித்தரொடு முத்த ரென்றே
திளைத்தெழுமா தவர்புகழித் திருநகரைத்
தமிபுரங்தே திசையோ ரெட்டும்
வளைத்தெழுமாண் புடைத்திகிரிப் பிடரினுமே
தண்டத்தும் வானி லாவிற்
கிளைத்தெழும்வண் புகழாளன் பெருநாமந்
திருவழுதி கிழவ னுமே. (க)

வேறு.

2158 வற்றாக் கடல்வற் றினுங்குணபால்
வருசெங் கதிரோன் வடக்குதய
முற்றா னெனினு மமிர்துபுளிப்
புறினு மதியோ னுருப்பமுறப்
பெற்றா னெனினும் பருவமழை
பெய்யா தெனினு முறைதவறக்
கற்றா னலன்வெவ் வுரையுமில
னிலனென் பதுவுங் கற்றிலனே. (உ)

2159 அடக்கத் தகுமைம் புலனடக்க
லொழுக்கம் பொறையன் புடைமையற
தொடக்கத் தனவா நற்குணத்தின்
றொகுதி குலத்தூய் மையினுடையான்
விடக்கற் பனசால் புறங்கூறல்
வெகுளி பிறனில் விழைதனரா
குடக்கத் தருநீ டழுக்காறு
தியதற் குணங்க ளொன்றிலனே. (௩)

2160 கொல்லா விரத மருளுடைமை
கொல்லா விரதஞ் செய்நன்றி
கொல்லா விரத மீகையினைக்
கொல்லா விரத மொப்புரவைக்

கொல்லா விரதம் விருந்தின்முகங்
கொல்லா விரத நடுவுநிலை
கொல்லா விரத மெய்யுணர்வைக்
கொல்லா விரத மெனவுணர்ந்தான். (ச)

2161 உலகத் தமைந்த சிறப்புடைமன்
னுயிர்கட் கமைந்த குணங்குறிகட்
கலகற் றுளயாப் பினுளுவமை
யமைப்ப திவனற் குணங்குறியே
பலகற் றுயர்ந்தோர் மறித்துவமை
பகர்தற் கிவன்பாற் பயின்றுளவா
மிலகுந் தமநற் குணங்குறிகட்
கேலா தவர்நற் குணங்குறியே. (ரு)

வேறு.

2162 ஒருவழுதி யெனமுதலே யிந்துகுலத்
துதித்தவனென் றுலகம் போற்றப்
பெருவழுதி மாயினிற்கூன் செழியனருந்
தவம்பெருக்கிப் பெற்ற கொற்றந்
தருவழுதி யொருவன்வழிப் பொருப்பின்மணி
விளக்கெனவே தகைசா லிந்தத்
திருவழுதி கிழவனருட் புதல்வன்முத
லவர்நாமஞ் செப்ப லுற்றேன். (சு)

2163 *மறந்தாங்கித் தெவ்வடுவைந் நுதிதாங்கி
யிருட்பிழம்பு மடியச் செந்தி
நிறந்தாங்கி யிடங்கரின்வெண் ணிணந்தாங்கி
[1]யனைத்துயிரு நியதி காக்குந்
திறந்தாங்கி யொளிர்திகிரிப் படைதாங்கித்
திருவடிபொற் சென்னி தாங்கி
யறந்தாங்கி வளம்புகழ்வா ரறந்தாங்கி
யவரெனுமிவ் வங்கண் ஞாலம். (எ)

---

[பி-ம்.] [1] யனைத்துலகு. மா.

உ

# "செந்தமிழ்" நேயர்களுக்கு ஒரு வேண்டுகோள்.

இம் மதுரைத்தமிழ்ச்சங்கத்தாரால், சென்ற முப்பத்துநான்குவருட காலமாகத் தமிழ்மொழியின்வளர்ச்சிகருதி மாதம் ஒருமுறை வெளியிடப்பெற்றுவரும் இச்"செந்தமிழ்"ப்பத்திரிகையானது, பல பண்டிதர்களாலும் எழுதிவரப்பெறும் அரியவிஷயங்களை எளிதில் எல்லோருமுணர வெளியிடும்பெருமைவாய்ந்ததென்பது யாவரும் அறிந்ததே. அது, செந்தமிழ்நேயர்களின் அபிமானத்தையும், பண்டிதர்களின் ஆதரவையுங்கொண்டே இப்பகுதியோடு முப்பத்து நான்காந்தொகுதி முற்றுப்பெற்றிருக்கிறது. இனி, முப்பத்தைந்தாந் தொகுதி தொடக்கப்பெற்று, அதன் முதற்பகுதி நாளிது ஈசுவர௵ கார்த்திகைமீ முதற்றேதி வெளிவரும். அப்பகுதி வழக்கப்படி அங்கத்தினர்களுக்கும், செந்தமிழ்ச் சந்தாதார்களுக்கும் அத்தொகுதியின் வருஷச்சந்தாவுக்கு வி. பி. யில் அனுப்பப்பெறும். செந்தமிழபிமானிகள் வி. பி. யை அன்புடன் பெற்றுப் பத்திரிகையை ஆதரித்துவருவதோடு தங்கள் நண்பர்களையும் பத்திரிகையைத் தருவித்துப் படித்துவரும்படி தூண்டவும், பண்டிதர்கள் சிறந்த விஷயதானமளித்துச் செந்தமிழைச் சிறப்பித்துவரவும் வேண்டிக்கொள்ளப்பெறுகிறார்கள்.

N. B. முப்பத்தைந்தாந்தொகுதிச் சந்தாத்தொகையை மணியார்டர்மூலம் அனுப்பிப் பத்திரிகையைப் பெற்றுக்கொள்ள விரும்புவோர், நாளிது ஈசுவர௵ ஐப்பசிமீ 25உக்குள் இச்சங்க மாபிசிற்குக் கிடைக்கும்படி மணியார்டரை அனுப்பிவைத்தல் வேண்டும். அதற்குள் மணியார்டர் வராவிட்டால் முப்பத்தைந் தாந்தொகுதியின் முதற்பகுதி வழக்கப்படி வி. பி. மூலம் அனுப்பப் பெறும். வி. பி. அனுப்பியபின்பு அதனை அங்கீகரிக்காது திருப்பி யனுப்புவதால் சங்கத்துக்கு வீண்செலவு நேரிடுமாதலால் தயவு செய்து வி. பி. யை அங்கீகரித்துச் செந்தமிழை ஆதரித்து வருமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.